# ஸ்ரீஸங்கல்பஸூர்யோதயம்

ஸ்ரீ நிகமாந்த

- மஹா -

- தேசிகன் -

அருளிச்

செய்தது.

ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்தி ஸம்ரக்ஷணஸபா, சென்னை.

ஸ்ரீ:

# ஸ்ரீ ஸங்கற்ப ஸூர்யோதயம்

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்தது.

(நடிக்கும்படியாகச் சுருக்கித் தமிழ்ப் படுத்தப்பட்டது.)

மைலாப்பூர் அட்வகேட் ஸ்ரீ உ.வே. எஸ். ஆராவமுதய்யங்கார்
ஸ்வாமியின் பொருளுதவியைக்கொண்டு
சென்னை: 'ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்தி ஸம்ரக்ஷண' ஸபையாரால்
ப்ரசுரிக்கப்பட்டது.



ஆர். ஆர். ப்ரிண்டிங் ஒர்க்ஸ், வேப்பேரி போஸ்ட்

பஹுதான்ய - ஆவணி.] —— [ ஆகஸ்டு 1938

0—8—0

## FOREWORD.

The publication by the Sri Desika Srisukti Samrakshana Sabha of this small book needs no apology. It is a humble but earnest attempt to present to the public in the form of a Three-Act Drama the highest philosophical truth about the relation of Jeevatma to Paramatma which the greatest Vaishnavite Acharya, Sriman Nigamanta Mahadesikan, has expounded in his classical dramatic work, known as ***Sri Sankalpa Suryodaya.***

2. It is not necessary for us to dwell at length on the labours of this great Acharya in the field of Visishtadvaitam. Suffice it to say that this Mahan, born of illustrious parents, led a simple, austere and mendicant life, solely devoted to the propagation of Sri Ramanuja Siddhantam through numerous and diverse forms of literature, such as Kavyas, Drama, Sthothras and philosophic treatises His name is associated with more than 116 works which serve to expound in one aspect or another the tenets of the philosophical system of Sri Ramanuja.

3. One of these works is ***Sri Sankalpa Suryodaya,*** a play in 10 Acts. This play is not a mere abstract philosophic treatise. In presenting the cream of Eastern philosophic thought in a dramatic form, he has utilised as ***dramatis personae*** the personification of various conflicting emotions of man, such as Viveka, Sumathi, Vyavasaya, Tarka and Samskara on the one side and Mahamoha, Durmati, Kama, Krodha, Lobha, Raga, Dwesha, Dambha, Garva, etc, on the other. This form

of presentation makes a very direct appeal to the lay mind and facilitates the easy understanding of the conflicts of human life and the means of liberation of the soul imprisoned within the mortal frame. Simply told, the play aims at presenting how 'the Jeeva imprisoned in this sareera by manas (the ten-headed demon) can be liberated and made to attain Moksha (freedom) and final Bliss. The various human antagonistic elements and characters are arranged in distinct opposite camps waging war with each other, one trying to lift the Jeeva to Moksha, and the other to keep him out of it. The camps are headed by Viveka and Mahamoha, the former trying to help the Jeeva and the latter seeking to thwart Viveka in his attempts through the help of his assistants, Kama, Krodha, Lobha, etc. We learn that though Purusha attains sufficient wisdom to resort to *bhakti* as a means of attaining moksha, he is still unsteady and wavering, unable to get over completely the worldly desires until through the Acharya Upadesha he is enabled to control the mind and take up Bhaktiyogam step by step. This Acharya Upadesha is thus the necessary precursor of even the Dawn of the Divine Will and ultimately brings the blessings of the Loving Lord, who, in his infinite mercy, sends forth his Sankalpa or Will to assure the Jeeva of release from Karma and of the attainment of infinite bliss. This struggle in the Jeeva to get mastery over the common desires and to attain salvation is the main theme of this wonderful classical drama bequeathed to us for our spiritual benefit by the Great Acharya.

4. The original Sanskrit text is, as said above, divided into 10 Acts. The unfurling of the play as it develops through every Act is a beautiful and touching depiction of the various consecutive stages, and no translation or adaptation is likely to reproduce effectively the peculiar charm of the original work. We shall certainly miss the gentle humour, the lively touches, the penetrating observation, the apt and lucid style and melody of the original in this little brochure. An honest attempt has however been made to present to the general reader (who does not possess knowledge of Sanskrit) as clear a conception as possible of not only the teaching of the great author, but also the form in which he has taught.

5. This Tamil Drama is written in three Acts and probably it is the first of its kind presented to the public since the days of the great Acharya. The first Act summarises the first three Acts of the original and deals with Purusha's conflict with the wordly desires and Viveka's anxiety to help him. The second Act contains the subject matter of the next four Acts of the original and portrays the conflict developing into a climax in the preparation of war between Viveka and Mahamoha. The third Act corresponds to the last three Acts of the original, and depicts the conflict between Mahamoha and Viveka, describing the result of Viveka's triumph over Mahamoha and Purusha's salvation after the Dawn of the Divine Will.

6. Lastly, a word about the author of this brochure, Sri V. K. Parthasarathi Ayyangar, Advocate,

High Court. He undertook this task as a labour of love and finished it amidst his other pressing work in a remarkably short time. The condensation of the great work without missing any of its essentials is a difficult task but it has been accomplished successfully. The thousands who will achieve a clearer comprehension of their Great Acharya through this work will feel that they owe a deep debt of gratitude to Sri Parthasarathi Ayyangar.

The Sabha's grateful thanks are also due to Sri Nerur R. Srinivasachariar who has set many slokas of the original Text to music with due regard to the requirements of the stage.

Sri Desika Sri Sukti Samrakshana Sabha,
*Madras*, *21-7-1938.*

RAO SAHIB
R. RAMASWAMI AYYANGAR,
*President.*

# நாடக பாத்திரங்கள்

---

| | |
|---|---|
| ஸ்ரீமஹாவிஷ்ணு; ஸ்ரீதேவி; பூதேவி, நீளாதேவி | |
| நாரதர், தும்புரு | |
| ஆசார்யன், சிஷ்யன் | —ஸித்தாந்த வாதிகள் |
| ஸூத்ரதாரன், நடி. | |
| புருஷன் (ஜீவாத்மா) | |
| விவேகன் | —ராஜா |
| மஹா மோஹன் | —அஞ்ஞானம் |
| வ்யவஸாயன் | —விவேகனது ஸேனாபதி |
| தர்க்கன் | — ,, ஸாரதி |
| ஸம்ஸ்காரன் | — ,, சில்பி |
| த்ருஷ்டப்ரத்யயன் | — ,, தூதன் |
| ஸங்கல்பன், விஷ்ணு பக்தி | —பகவானுடைய ஆட்கள் |
| விரக்தி, துஷ்டி, அதிக த்ருஷ்டி, சாந்தி, ஸத்ருச த்ருஷ்டி | —வேலைக்காரிகள் |
| காமன் | —மன்மதன் |
| வஸந்தன் | —காமன் நண்பன் |
| ராகன், த்வேஷன், க்ரோதன், லோபன், டம்பன், தர்ப்பன் (கர்வன்) | —மஹாமோஹனது மந்திரிகள் |
| ஸம்வ்ருதி ஸத்யன் | —மஹாமோஹனுடைய தூதன் |

| | |
|---|---|
| புத்தி | —புருஷனுடைய பத்னி |
| ஸுமதி | —விவேகன் மனைவி |
| விசாரணை | —ஸுமதியின் தோழி |
| முதிதா | —ஸுமதியின் தோழி |
| துர்மதி | —மஹாமோஹன் மனைவி |
| ரதி | —காமன் மனைவி |
| த்ருஷ்ணை (ஆசை) | —லோபன் மனைவி |
| குஹனை (வஞ்சனை) | —டம்பன் மனைவி |
| அஸூயை | —தர்ப்பன் மனைவி |

---

இடம் :--ச்வேத த்வீபம்.



ஸ்ரீ:

    

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌹𑌯𑌗𑍍𑌰𑍀𑌵𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃

𑌶𑍍𑌰𑍀 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌸𑍂𑌰𑍍𑌯𑍋𑌦𑌯𑌃

# ஸ்ரீ ஸங்கற்ப ஸூர்யோதயம்.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ॥

ஸ்ரீமாங்வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ
வேதாந்தாசார்யவர்யோமே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

𑌯𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌚𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑍇 𑌦𑌿𑌨𑌮𑍁𑌖𑍇 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌕𑍍𑌷𑌮𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌿𑌣𑌃
𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌸𑌂𑌸𑍃𑌤𑌿𑌶𑌰𑍍𑌵𑌰𑍀𑌂 𑌕𑍍𑌷𑌪𑌯𑌤𑌿 𑌯𑌤𑍍𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌸𑍂𑌰𑍍𑌯𑍋𑌦𑌯𑌃 ॥
𑌤𑌦𑍍𑌵𑍈𑌰𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑍈𑌰𑌧𑌿𑌗𑌤 𑌸𑍍𑌵𑌾𑌧𑍀𑌨 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌨𑍍𑌨𑌤𑌿𑌃 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌸𑌮𑍇 𑌸𑌮𑌸𑍍𑌤𑌵𑌿𑌪𑌦𑍁𑌤𑍍𑌤𑌾𑌰𑌾𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 ॥

யத்பக்திப்ரசயாத்மகேதினமுகெ த்ருஷ்டிக்ஷம: க்ஷேத்ரிண:
க்ஷிப்ரம்ஸம்ஸ்ருதிசர்வரீம்க்ஷிடதியத் ஸங்கல்பஸூர்யோதய -
தத்வைரஸ்த்ரவிபூஷணை ரதிகதஸ்வாதீன நித்யோன்னதி:
ஸ்ரீமாநஸ்துஸமே ஸமஸ்தவிபதுத்தாராய நாராயண:.

## [ஸூத்ரதாரன் பிரவேசம்.]

---

ச்ருங்காராதி ஸகல ரஸ ரூபங்களையும் தன்னிடத்தேயே பூண்டதாயும், மகா ச்லாக்யமுமான சாந்தி ரஸம் ததும்ப, விவேகாதி மனுஷ்ய ஸ்வபாவங்களனைத்தையும் நாடகபாத்திரங்களாக அமைத்து, மாறிமாறிப் பிறந்திறந்து கரையறியாது உழன்று வரும் பாமரர்களை ஸம்ஸாராந்த காரத்தினின்றும் மீட்கவல்லதான பகவத் ஸங்கல்பமாம் ஸூர்யோதயத்தை வெளிப்படுத்தி, யாவரையும் நித்யானந்தத் திற்குள்ளாக்க வேண்டுமென்பது, சகல கலாவல்லவர்களும் ஆசார்யச்ரேஷ்டர்களுமான பெரியோர்களது ஆக்ஞை. அத் தகைய அஞ்ஞானாந்தகாரத்தைப் பேதித்து, நித்யானந்த வெளிச்சத்தில் நம்மைப் புகுத்தவல்ல அருணோதயமாகக் கூடிய ஞானவொளியை அளிக்குமாறு ஆதிமூர்த்தியான ஸ்ரீ ஹயக்ரீவ மூர்த்தி அருள் புரிவாராக.

## பூர்வகல்யாணி—சாபு.

ஆரோ.—ஸ ரி க ம ப த ஸ்
அவரோ —ஸ் நி த ப ம க ரி ஸ

ப்ராசீஸந்த்யா காசிதந்தர்நிஶாயாஃ, ப்ரஜ்ஞாத்ருஷ்டேரஞ்ஜந ஶ்ரீரபூர்வா ·
வக்த்ரீவேதாநாமபாதுமேவாஜிவக்த்ரா, வாகீஶாக்யாவாஸுதேவஸ்யமூர்த்திஃ ॥

ப்ராசீஸந்த்யா காசிதந்தர்நிஶாயாஃ, ப்ரஜ்ஞாத்ருஷ்டேரஞ்ஜந ஶ்ரீரபூர்வா ·
வக்த்ரீவேதாங்பாதுமேவாஜிவக்த்ரா, வாகீஶாக்யாவாஸுதேவஸ்யமூர்த்திஃ.

| | | | |
|---|---|---|---|
| ;;—தஸ் - ஸ்ா ; . ;; | ஸ்ா ;; - ஸ்ா ; - ஸ்ா ; | ;; நித - தா ; தா ; | பா, தநீ - தாபா - பா ; ‖ |
| ;;—ப்ரா - சீ ; - ;; | ஸந்த் ;;...யா ;—. ; | ;; கா - சி ;—தந் ; | தர், நி.—சா.—யா ; |
| ; பா—பா - பா ; பா-மா | காமாகா - காரீ - ரீ | ; ; கம - பா ; தாபா | பஸ்ஸ்ா ; - ஸ்ா ; - ஸ்ா ; ‖ |
| ; :—ப்ர - ஞா ;—; . | த்ருஷ் . . -டே ;; | ;; ரஞ் - ஜ ; ன. | ஸ்ரீ. ர ; - பூர் ; - வா ; |
| ;;—ரீரீ ; - ரீ ; | ரீ ;; ரீ ; - ;; | ;; ஸ்ரி - க்ா ; - க்ா ; | ரிக்ம்ா ; - க்ர்ரீ—ஸ்ா ; ‖ |
| ;;—வக்த்ரீ ; - . ; | வே ;; தான் ; - ;; | ;; பா.—து ; - மே ; | வா. ஜீ ; வக்த்.—ரா ; |
| ;;- ா ஸ்ா ;;- ;; | ஸ்ாநீதா - தாபா - ஸ்ா ; | ;; ஸ்நி - தப ;—; பம | காமா ; - காரீ - ஸா : ‖ |
| ;;—ா ஸீ ; - ;; | சாக் . .—. .—யா ; | ;; வா - ஸு ;—; தே. வஸ்ய ; - மூர்த்தி ;— | |

[நடிப் பிரவேசம்.]

ஸூத்ர.—ஆர்யே! நமது நாடக பாத்திரங்கள் தயாராயுள்ள னரா?

நடி.—ஆர்ய! எந்த க்ஷணத்தில் எந்த நாடகத்தை நடித்துக் காட்ட உத்திரவோ, அந்த க்ஷணத்திலேயே அதற்காக ஆயத்தமாகக் கூடிய நடிகர்கள் நம்மிடமிருக்கையில் உமக்குச் சிந்தையேன்? இப்பொழுது தாங்கள் நடித் துக்காட்ட விரும்பும் நாடகம் யாதோ?

ஸூத்ர.—மனுஷ்ய ஸ்வபாவம் ஒவ்வொன்றையும் அததுக் குரித்தான அபிமான தேவதையாக நடிக்கச் செய்து, விவேகனைக் கதா நாயகனுக்கி, அன்னுன்தன் வைரியாம் மகா மோகனை எதிர்க்குமிடங்களில் யுத்தவீர ரஸத்தை யும், பரமாத்மா ஜீவனுக்காக வருந்தி இரங்கு மிடங் களில் தயாவீர ரஸத்தையும், மற்றும் ஞான வைராக்ய மடைந்த ஜீவாத்மாவை முக்தனுக்கு மிடங்களில் சாந் திரஸ ஸ்வரூபத்தையும் மிகுத்து, இதர ரஸபாவங்களை ஆங்காங்கே எற்றபடி அமையக்கொண்டதுமான ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதயமென்னும் தனக்கிணையற்றத் தனிப்பெரும் நாடகத்தை நடித்துக் காட்ட விரும்பி யுள் ளேன். அர்ச்சுனனை வியாஜமாத்திரமாகக்கொண்டு கீதை யென்கிற அமிர்தத்தைக் கண்ணன் உலகத்தோர்க்கு அளித்தருளினுப்போல, லோகோத்தாரணார்த்தம் ஓர் வ்யாஜமாத்திரமாக, கவிச்ரேஷ்டரும் ஆசார்ய ச்ரேஷ்ட ருமானவரால், குணுகுணங்களைப் பிரித்துக் காட்டி ஞானத்தை உண்டாக்குமாறு எழுதப்பட்டதாகும் இந்த நாடக ரத்னம்!

நடி.—ஆச்சர்யம்! நம்மைக் கௌரவிக்க வந்திருக்கும் இச் சபையோரது மட்டிலா மதிப்பைப்பெற்ற அந்நாடகத் தின் ஆசிரிய ச்ரேஷ்டர் யாவரோ?

ஸூத்ர.—நீ அறியாயா?—தன் தபோபலத்தினல் புதியதோர் இந்திரலோகம் படைத்த விசுவாமித்ரருடைய கோத்ர பரம்பரையினரும், புண்டரீகாக்ஷஸோமயாஜி யென்னப் பட்டவரின் புத்திரராம் அநந்தஸூரியென்னும் வித்யா நிதியின் திருக்குமாரருமான வேங்கடநாத னென்னும் திருநாமங் கொண்ட கவிதார்க்கிக ஸிம்ஹமே இந்நாடக ஆசிரியராவர். கமலாஸனனுல் எம்பெருமானது திரு வாராதனக் காலங்களில் அஸுர குலத்வம்ஸத்தொனி போல் கணகணவென சப்திக்கும் கண்டையின் திருவவதாரமேயென சாஸ்திரஞ்ஞர்களால் ஊகிக்கப் பட்டவரும், ஸ்ரீரங்கநாதனது நியமனத்தால் வேதாந்தா சார்யனென்ற பிருது பெற்றவருமான ஸ்ரீ பாஷ்யகார ரின் சிஷ்ய பரம்பரையை உடைய அந்த உபயவேதாந் தப் பிரவர்த்தகரே, பகவத் பிரீதிகரமாக இவ்வஸா தாரண நாடகத்தை உலகோர்க்களித்தவர்!

நடி.—அவருடைய கருணைப் பிரபாவம் அளவிடத்தக்கதல்ல தான். ஆயினும், சாந்தி ரஸம் நாடகத்திற்கு எடுக்கப் பட்டதல்ல வென்று ஒரு வகுப்பார் கூறுகிறுர்களே?

ஸூத்ர.—மகா ச்லாக்யமான சாந்தி ரஸானுபவஞ்செய்ய வல்ல சபையோரும், சாந்தி ரஸ பாவங்களை நடித்துக்காட்ட வல்ல நடிகர்களும் கிடைப்பது துர்லபமான காரிய மென்ற அபிப்பிராயத்தினுலேயேதான் நாடக நூல்களில் சாந்தி ரஸம் எடுக்கப்படுவதில்லை. ஆகவேதான் அதை

ஸபைகளில் அபிநயிப்பது அசக்யமென்று ஒருதரப்பா ரால் ஒதுக்கப்பட்டது. ஆனால், உண்மையில், நவரஸங் களிலும் ச்லாக்யமானது இந்த சாந்திரஸமே. ச்ருங்கார ரஸத்தில் சபையில் அபிநயிக்கத்தகாத பாவங்கள் உண் டாகக்கூடும். வீரரஸாபிநயத்தில் ஒருவர் மற்றொருவரை அவமதிப்பதே மேம்படுகின்றது. அத்புத ரஸமோ நம்பத்தகாத பொய்மிகுந்த விஷயங்களையே எடுத்துக் காட்டவல்லது. இதர சாதாரண ரஸபாவங்களும் அற்ப மானவையே. சாந்தி ரஸமோ மனோ துக்கங்களைப் போக்கி உண்மையை வெளிப்படுத்திச் சந்தோஷத்தைக் கொடுக்க வல்லதுகாண்.

நடி.—வாஸ்தவமே! ஆயினும், ஸாதாரண ஜனங்களும்பார்த்து அனுபவிக்க வேண்டிய நாடகங்களில், இந்தப் பரமோத் க்ருஷ்டமான சாந்தி ரஸத்தை மிகுத்திக் காட்டக் கூடுமா வென்று தான் எனக்குச் சந்தேகமாயிருக்கிறது.

ஸூத்ர.—பெண்ணே! நாடகத்தின் உண்மையான தத்வத்தை நீ பூர்ணமாய் அறிந்திட்டாயில்லை போலும். நாடகானு குணமாக உபயோகப்படுத்தக்கூடாத சாஸ்திரங்கள் சாஸ்திரங்களல்ல, வித்யைகள் வித்யைகளல்ல, சித்திரங் கள் சித்திரங்களல்ல, கலைகள் கலைகளல்ல, யோகங்கள் யோகங்களல்ல, ஞானமும் ஞானமல்ல.

நடி.—எப்படியாயினும், சபலசித்தம் வாய்ந்த என் பேதை மனத்துள், தாம் கைக்கொண்ட காரியம் மகாபிரயாஸகர மானதாகவே படுகிறது. துவேஷவசத்தினராகிய பண்டி தர்களது கண்டன மொழிகளைக் குறித்தே அஞ்சுகிறேன்.

ஸூத்ர.—பேதாய்! இதற்கோ அஞ்சுவது? பகவத் ஸங்கற்ப மாத்திரமாய் கல்விக்களஞ்சியத்தினின்றும் நமக்குக் கிடைத்த, தோஷரஹிதமான ரஸபாவ ச்ரேயஸ் மிகுந்த

இந்த நாடகத்தை, தேர்ந்த நடிகர்கள், பக்ஷபாத மற்ற மகாபெரியோர்கள் நிறைந்த இந்த ஸபையில் நடித்துக் காட்டுவதைக் குறித்துமா நீ அஞ்சுவது? பெரியோர்கள் மனத்தில் அவர்களேயுமறியாது அஸூயை உதித்தாலும் அது மின்னல்போல் க்ஷணத்திலேயே மறைந்தொழியக் கூடியதாகும். துவேஷ வசப்பட்டவர், வெளிக்கு வெறுப்புக்காட்டிய போதிலும், மனத்துள் நம் நாடகத்தைப் புகழ்ந்தே மதிப்பார்கள் என்பதை நம்பு. ஆகவே ஸபையோரின் ஆதரவை மேற்கொண்டு அன்னாரது அநுக்ரகத்தை வேண்டிக் குதூகலத்துடன் நடிகர்களை வரச்செய்து நாடகத்தை ஆரம்பிக்கலாம் வா.

(போகிறார்கள்.)

# அங்கம் I.

## முதற் காட்சி.

இடம் :—ச்ருங்கார வனம்.

[வஸந்தன் தொடர, ரதியும் காமனும் குதூகலத்துடன் பிரவேசம்.]

**காமன்.**—வஸந்தா! விவேகனது வீண் ஆரவாரத்தைப் பார்த்தனையா? ஸ்திரீகளின் புருவமாகிற தனுஸ்ஸினின்றும், அவர்களது அகத்தின் சஞ்சலத்தைப் புறத்தே காட்டுவனபோன்ற விழிகளாம் புஷ்பபாணங்களாகிற கடைக்கண்ணோக்கு வெளிப்படுமாயின், இந்த விவேகன் எந்தத் திக்கில், தான் இருக்கக் கூடுமென்பதை அறிவனோ?

வஸந்.—வாஸ்தவமே!—நண்ப! நமது மகாராஜா மகாமோக னுக்கே மங்கள முண்டாகுமாறும், விவேகனுக்குப் பீதியை யுண்டாக்குமாறும், மன்மத மகோத்ஸவமாம் உனது திருவிழாவை இப்பொழுதே நான் தொடங்கப் போகிறேன்.

காமன்.—அதுவே ஸரி. விவேகன் ஜெயிக்கப்படுவது திண்ணம்.

ரதி.—நாதா! உத்ஸவம் உண்மையில் எனக்கு உத்ஸாகத் தைக் கொடுக்கவில்லையே! தடுத்தற்கரிதானதோர் விதி யினுல், வெல்லுதற்கரிதான விவேகன், மகாராஜன் மகா மோகனது ஜென்ம வைரியாக அமைந்ததை நினைக்க நினைக்க, எனக்கு மனவமைதி உண்டாக வில்லை!

காமன்.—பேதமை மிக்கவளே! சமமானதோர் வீர வைரியை எதிர்த்து வெற்றியுடன் வெளிவரவேண்டிய சந்தர்ப்பம் நமக்குக் கிடைத்ததைக்கண்டு மகிழ்வதை விட்டு, அவ் விவேகனது வைபவத்தைப்பாராட்டிப் புழுங்குவதோ முறை? ஹ! ஹ! ஹ! மேருவையே தனுஸாகக் கொண்ட முக்கண்ணனும் என் கரும்பு வில்லின் கணைக் குட்பட்டவனல்லவா?

வஸந்.—ராணியறியாத ரகஸ்யமல்லவே அது! மன்மத ராஜ னின் மகிமை பண்டை பரம்பரையாய்ப் பரவி வருவ தல்லவா? பிரம்மனும் பத்தினியை வேதமோதும் தன் நாவிலேயே வைத்து மகிழ்வதேன்? ருத்ர மூர்த்தியும் தனது வாம பாகத்தையே ஓர் மாதுக்கு அர்ப் பணஞ் செய்து விட்டதேன்? யாவராலும் கொண்டா டப்படும் அந்தப் பரதத்வமும் ஆய்ச்சியர்க்கே அதீன மாய்க்கிடந்ததேன்? மும்மூர்த்திகளுமே காமன் கணைக் கிலக்காகிக் கலங்கிக் கிடந்தனரென்றால், விவேகனது

கூட்டத்தாராம் அற்பர்களா மதன பாணவஸ்தையை மீறவல்லவர்கள் ?

ரதி.—எனினும், வைராக்யமென்னும் கோட்டைக்குள், முன்னறிவு மிக்க மந்திரிகளது உதவியும் விடாமுயற்சியுமுடையவனாகிய அஸகாய சூரனான விவேகன் நமக்கு எக்கணம் யாது இன்னல் விளைவிப்பனோ என்ற கலக்கம் என்மனத்தை விட்டு அகலத்தான் இல்லை.

காமன்.—அடி பயங்கொள்ளி ! ஸ்திரீகளுடைய சரீர அமைப்பையே ஒத்த இந்த வில்லும் நாணும் அம்புமே, இப்பிரபஞ்சமனைத்தையும் ஜெயிக்கவல்ல உன் பர்த்தாவின் கொடிகணைகள் ஆகும் காண். மதுரச் சொற்களையுடைய ஸ்திரீகளது பெயரையேகேட்ட மாத்திரத்தில் ஒருவனது விரக்தியாதி சகல நற்குணங்களும் இருந்தவிடந் தெரியாது பறந்தோடிப்போய் விடாதா !

வஸந்.—ஸ்திரீகளது, குணங்களைப்பற்றி யோசிப்ப திருக்கட்டும். அவர்களிடம் தோஷத்தை எண்ணுவதற்காக அவர்களை நினைப்பதே போதுமே வைராக்யத்தை விலகி நிற்கச்செய்ய ! ஹ ! ஹ ! மதயானையாம் மனத்தைத்தன் தைர்யத்தினால் அடக்கப் பார்ப்பது, ஐராவதத்தைத் தாமரைத் தந்துவினால் கட்டச்சமைவதொக்கும்.

ரதி.—ஏன் ?—. புத்தியால், மோக்ஷபர்யந்தமான யாவற்றையும் ஒருவன் ஸாதித்துக் கொள்ளக் கூடுமென்பது ப்ரஸித்த மல்லவா ?

காமன்.—(கோபச் சிரிப்புடன்) என்ன ? நான் இருக்குமிடத்திலுமா ஸ்திரபுத்தி நிலைக்கக் கூடும் ? அத்துடன் கூட, க்ரோதனும் என் துணைக்கு வருவானாகில் எங்களை

எதிர்க்க வல்லவரு முளரோ? கோபாதீனனவன் புத்தியையிழந்து, செய்ததை மறந்து, செய்ய வேண்டுவனவற்றை விடுத்து, அஞ்ஞானாந்தகாரத்தி லாழ்ந்து நாசமடைவது நிச்சயமல்லவா? அச்சமயம் விவேகனும் அக்கோபாதீனனை அணுகவும் முடியுமோ? விவேகனாலும் அவன் மந்திரிகளாலும் நமது ஸாகஸங்கள் ஆகக்கூடியனவோ!

ரதி.—அதுகிடக்கட்டும்.—நாதா! விவேகனாதியோர்களுக்கும் நம் கக்ஷியாருக்கும் இப்படி வீரவைரம் ஏற்படக் காரணமென்ன?

காமன்.—காரணமா!—ஸத்வம், ரஜஸ், தமஸ்ஸென்று முக்குணங்கொண்ட ஜீவாத்மாவுடன், புத்தியென்ற பத்னியின் சேர்க்கையால், அவ்வக் குணங்கள் மிகுந்த காலத்திலுண்டாகிய முக்குலங்கள் தோன்றின. இக்குலங்களே முறையே, விவேகன், ராகன், மோகன் முதலியோராகும். இவற்றுள், ஸத்வகுண மிகுதியால், ஸம்ஸார சுகதுக்கங்களை த்வேஷிக்கிற விவேகன், விஷயாநுபவங்களில் தோஷத்தை அறிபவளாம் ஸுமதியை மணந்து, தன்குலத்திற்கு ராஜாவாகத் தனித்து நிற்கிறான். ரஜஸ்ஸும் தமஸ்ஸும் மிக்க மற்ற இருகுலத்தினரும் ஒன்று சேர்ந்து, மகாமோகனைச் சக்ரவர்த்தியாக்கிக் கொண்டு, மோக்ஷத்தில் தோஷத்தையே ஆராயுந்தன்மையுள்ள துர்மதியை அவனுக்கு மனைவியாராக்கி மகிழ்ந்து பெருகி விளங்குகின்றனர்.

ரதி.—அப்படியா?...பிறகு?

**காமன்.**—இக்குலத்தோர் யாவருக்கும் பிதாவாகிய ஜீவாத்மாவும் மாதாவாகிய புத்தியும், தத்சமயம் மகாமோகன் கக்ஷியின்மீதே அபிமானம் மிகுந்துள்ளார். இதைக் கண்டு சகியாத விவேகனது கக்ஷியினர், தம் கக்ஷி க்ஷீணித்து நசிக்க இருப்பதைக் கவனியாது, ஜீவாத்மாவின் ஸம்ஸார சுகபோகத்தையும், அத்தகைய விஷயாதிகளை விருத்திசெய்து வரும் எங்கள் கக்ஷியினரையும் வேரறுக்கக் கங்கணங் கட்டியுளர்.

**ரதி** —உம்.—அப்புறம் ?

**காமன்.**—குரங்குகளுக்கும் ராக்ஷஸர்களுக்கும் அரசர்களாம் சுக்ரீவ விபீஷணாதிகளைப் பிரமாணமாகக்காட்டி, ப்ரகிருதியினிடத்தில் ஜீவாத்மாவுக்கு விரக்தியை உண்டாக்கி, அந்த ஜீவனை இந்த விவேகனதியர் பலவிதத் தொல்லைகளுக்கும் அவஸ்தைகளுக்கும் ஆளாக்கி வருகின்றனர். இதனால் நம் பிதா, பிறர் குற்றத்தைக் காண்பதில் பிறவிக் குருடனாகவும், பர நிந்தை சொல்வதில் ஊமையனாகவும், அவற்றைப்பற்றிக் கேட்பதில் பிறவிச் செவிடனாகவும், பரஸ்திரீகளை வசப்படுத்துவதிலும் அவர்களால் வச்யப்படுத்தப்படுவதிலும் இந்திரிய வியாபாரங்களற்றவராகவும் நபும்ஸகனைவும் மாறி, பேராபத்திற்குள்ளாக இருக்கிறார். இத்தகைய ஆபத்தினின்றும் எம் தந்தையை மீட்பதற்காகவே, ப்ராத்ருஸ் ஸ்நேகத்தைப் பாராமலும் நாங்கள் விவேகனதியோரை ஒழிக்க வேண்டி, ஒரே பிரம்மாவினல் படைக்கப்பட்டவராயினும் தேவாசுரர்கள் தீராப் பகைவரா யிருந்ததுபோல, ஒருவருக்கொருவர் ஜென்ம வைரிகளாகி இருக்கிறோம்.

ரதி.—ஐயையோ ! பெற்றோரது பேரானந்தங்களைப் பிள்ளைகளே போக்க வழிதேடுகிறார்களே ! நாதா !—ஸகோதரர்களாம் உங்களுக்குள் யுத்தமொழிந்து ஒற்றுமை ஏற்படும் மார்க்கம் கிடையாதா ?

காமன்.—பைத்தியமே ! புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா? அர்த்தம், காமம் இவைகளையே மிகப் போக்யமாகக் கொண்ட எங்களுக்கும், நாராயணனே பரமபோக்ய மெனப் பாடுபட்டுவரும் எமது விரோதிகளுக்கும், கனவிலும் சமாதானமேற்படுவது முடியாத காரியமாகும். எங்களுள் வெற்றி பலிஷ்டருக்கே! மகாமோகன் எக்காரணத்தாலும் ஸமாதானத்தை வேண்டான். நானும் உடன்படேன்.

ரதி.—குலநாசகர்களாகிய விவேகனுதியோர் மகா பலிஷ்டர்களாம் உங்களை நசிக்கச்செய்ய உத்தேசித்திருக்கும் உபாயங்கள் தாம் யாவையோ ?

காமன்.—காமினி ! அது, ஸ்திரீகளிடத்தில் பிரஸ்தாபிக்கத் தகாததோர் ராஜ ரகஸ்யமாகும்—.

ரதி.—(மன்றாடுபவளாய்) நாதா ! என் மீதாணை ! உமது நண்பர் மீதாணை ! ராஜ ரகஸ்யமாயினும் யதார்த்தத்தை என்னிடம் வெளியிடத்தான் வேண்டும்.

வஸந்.—(தனக்குள் பெருமூச்செறிந்து) ஹூம் விதி வலிது ! (வெளிப்படையாய்) ஸகே. மகரத்வஜ ! விரோதிகளின் ரஹஸ்யங்களை வெளிப் படுத்துவதில் யோசனையேன் ? அது முறையே யன்றோ ?

காமன்.—வாஸ்தவந்தான்.—பிரியே ! அவர்களின் உபாயத்தை அறிவிக்கிறேன் கேள்.—ஒவ்வொரு கர்மங்களிலும் " கர்த்தா தானல்ல, பகவானே அவற்றைச் செய்விக்கி

றுன் ” என்று அனுஸந்திக்கும் அகர்த்ருத்வாபிமானம், ஸாத்விகத்யாகம் முதலிய விபரீதஞானங்களே உதவியாய்க்கொண்ட நிவ்ருத்தி தர்மங்களாம் பெரும்பேய் ஜீவன்மேல் ஆவேசித்து, புத்தியின் சேர்க்கையால் அந்த ஜீவனிடத்தில் நமது குலத்திற்கே வேர்ப்புழு போன்றவளாம் சாந்தி ஸ்வரூபையாகிய பரபக்தியென்னும் பிரம்மராக்ஷஸியைப் பிறப்பிக்கப்போகிறது. அப்பரபக்தியென்பாள், வைராக்யம் மிக்கு, ஐம்புலன்களேயுமடக்கி, மகா உக்ரமான தபஸ் செய்யுங்காலத்தில், பகவானுடைய கருணாப்ரபாவத்தால், கோடி கைடபாஸுரர்களுக்குச் சமானமானதோர் அஸுரன், அப்பரபக்திக்குச் சகாயனாகத் தோன்றுவான்,—(மௌனம்).

வஸந்.—(மனத்துள்) அவன் வருகையே, நம்மை நிர்மூலமாக்கும் பகவானது ஸங்கல்ப ஸூர்யோதயமாகும்!—(வெளிப்படையாய்) அத்துடன் நிறுத்துங்கள். பிறகு நடக்கப் போவதைச் சொல்லத்தகாது.

ரதி.—(பயத்தினல் பரபரப்புடன் காமனேக்கட்டிக் கொள்கிருள்). ஐயையோ! நாதா! என்னேக்காரும்! என்னேக் காரும்!

காமன்.—(ஆலிங்கனத்தால் ஆனந்தபரவசனுகி). ப்ரியே! மகாமோகராஜனது சேனுபதியின் வீரபத்னியா இப்படிப் பயப்படுவது? ஹ! ஹ!—. நான் கூறிய த்வ்வளவும் வேதாந்திகளென்னும் வழிபோக்கர்கள், மாளா வழியில் நடக்கும் களேப்பு தெரியாதிருக்கும் பொருட்டு கற்பனேசெய்து சொல்லிக் கொண்டே போகும் கட்டுக்கதையேயாகும். அவ்வளவும் இந்திரஜாலவித்தை! ஹ! ஹ! ஹ! என் கரும்புவில்லின் நாணெலி கிளம்பிய

மாத்திரத்திலேயே விரக்தியின் வீட்டை நாடுபவனு முளனோ? மகாமோகனை ஜெயிக்கவல்ல உபாயமு முளதோ?

ரதி.—மகாராஜனுக்கு மங்களமுண்டாக வேண்டியதே என் கோரிக்கை.

வஸந்.—அப்படியே ஆகுக: மகாமோகனுதியோர் உயிர்த் திருக்கும் வரை, ஜீவாத்மா மூலப்ரக்ருதியை நாடி விரக்திக்கு ஆளாவதில்லை யென்பது நிச்சயமே.

காமன்.—ஆம்! விவேகன் முயற்சிகள் வீணே! யுத்தத்தில் இறந்தும் பிழைத்தெழுந்த ஸுக்ரீவ ஸைன்யங்கள் போல, காமத்தின் சக்தியால் நம் குலத்தவர்களும் புத்துயிர் பெறுவார்களே!

(திரைக்குள்)

"அடே துராசாரா! லோகநாடக அரங்கத்தில், ஸம்ஸாரமென்னும் நாடகத்தில், ஜீவாத்மா ப்ரபன்னனென்னும் வேஷந்தரித்து நடித்த மாத்திரத்திலேயே ஸந்தோஷத்தை அடையப்பெற்ற பிரபுவாகிய ஸ்ரீமந்நாராயணன் தனது ஸாம்யத்தை அந்த ஜீவனுக்குக் கொடுக்கக் காத்திருக்கையில், வீண் பிதற்றலேன்? பகைவரை வென்ற கீர்த்தியும், பிதாவை ரக்ஷித்தலாகிய தர்மமும், எத்தனித்த எம் காரியத்தை நிறைவேற்றியதாலாகிய ஸந்தோஷமும் இக்கணமே எங்களை வந்தடையப்போகிறதுகாண்.

காமன்.—(பயத்துடன், பேச்சை மறைக்கவெண்ணி) பிரியே! ஸுமதியோடு விவேகன் நம்மை எதிர்த்து வருகிறான். இடம், காலம், வலிமைகளை ஓர்ந்தறிந்தே எதிரிமுன் தோன்றுவது வீரலக்ஷண மாதலால், தனித்திருக்கும் நாம் இச்சமயம் அவர்கள் கண்களில்படாது மறைவோம். வாருங்கள்.

(போகிறார்கள்.)

## இரண்டாங் காட்சி.

### இடம் :—ஓர் நதிக்கரை.

---

[விவேக ராஜனும் ஸுமதி ராணியும் பிரவேசம்.]

விவேக.—நம்மைக்கண்டு அஞ்சியோடும் அந்தப் பாபாசாரப் பேய்களைப் பார்த்தனையா? நம்மையேயன்றோ பாபிகளென்று தூஷித்துத் திரிகிறார்கள்!... மோகமென்னும் மாயையின் ஸ்வபாவம் இதுதான்! பிறரிடத்தில் இருக்கும் குணங்களை ஓர்ந்தறியாது, அவரிடம் இல்லாத குற்றங்களை இருப்பதுபோல் காண்பிப்பதுவும், தன்னிடம் இருக்கும் குற்றங்களை தெளிந்தறியாது, இல்லாத குணங்களை இருப்பதுபோல் பிரசுரித்துக்கொள்வதுமேயன்றோ மாயை!

ஸுமதி.—ஆம், நாதா! குரூபிகள் தம் முகத்தைக் கண்ணாடியில் காண்பார்களாகில், தமது விகாரத்தை அறிந்துகொள்ளாமல் கண்ணாடியிலேயே தோஷத்தைக் கூறுகிறார்களல்லவா?

விவேக.—நன்றாயுரைத்தனை! சுருங்கச்சொல்லி விளங்கவைத்தனை தத்வார்த்தத்தை! எனது தர்ம பத்னியாம் உன் உதவியைக் கொண்டு நான் நிறைவேற்ற வேண்டிய கார்யத்தை இதோ ஸங்கல்பித்துக்கொண்டேன். ஜீவனுக்கு உள்ளும் புறமும் ஸஞ்சரித்து, ஜீவனைப் பீடிப்பதையே தமது விளையாட்டாக உடைய மகா மோகனாதி பகைவர்களை வென்று, ஜீவனை ஸமாதியில் நிறுத்திப் பரமாத்மாவை அடைந்து க்ருதார்த்தனாகச்செய்யவேண்டிய நியமங்களைக் கண்ணுங் கருத்துமாய்ப் பெருக்குவதே எனது ஸங்கல்பமாகும்.

ஸுமதி.—சித்தம். ஆயினும், நித்தியன், நிர்மலன், ஸ்வயம் பிரகாசன், ஆனந்தஸ்வரூபன், என்றெல்லாம் போற்றப் படுகிற ஜீவாத்மா, மகாகொடூரமான துக்க ஸாகரத்துள் எப்படி அகப்பட்டு, ஏன் பரிதவிக்க நேரிடுகிறது?

விவேக.—ஏனு?—ஆகமப் பிரமாணத்தை நம்புவதே அதற் கான பிரதியுத்திரமாகும்.—ஜீவன் நிர்மலனே: நித்ய னே: ஸ்வயம்பிரகாசனே: ஆயினும், அநாதியான கர்ம உபாதியால் பாதிக்கப்பட்டு, அந்தக் கர்ம சேர்க்கையால் மகாமோகன் வசப்பட்டு துக்கஸாகரத்தில் மூழ்கநேரிடு கிறது. அந்தக் கர்மமென்னும் உபாதி நீங்குங்காலத் தில் ஜீவனும் ஸ்வயம் பிரகாசத்துடன் ஆனந்த ஸ்வரூப னுய் நிர்மலனுகி நித்யனுகக் காணப்படுகிருன். இயற்கை ஸ்வபாவத்துடன் செயற்கை காரணத்தின் கூட்டுதலா லுண்டாகும் மாறுதல்களை நாம் அனுபவத்தில் காண்ப தில்லையா? வெள்ளை ஸ்படிகத்தினுடன் செம்பருத்திப் பூவைச் சேர்த்து வைத்தால், ஸ்படிகமும் ரக்தவர்ண மாகச் சோபிக்கிறதல்லவா? அப்பூவை அப்புறப்படுத்து வோமாகில் அப்படிகமும் ஸ்வயம் பிரகாசத்துடன் விளங் குகிறதல்லவா?

ஸுமதி.—உண்மை யறிந்தேன். ஸர்வஞ்ஞ ஸர்வசக்தனை ஸ்ரீ லக்ஷ்மீபதியாம் பரமகாருண்யமூர்த்தி, கர்ம சம்பந் தத்தால் அவதிப்படும் ஜீவாத்மாவை இதுகாறும் ஏன் உபேக்ஷித்தார்?

விவேகன்.—இதை அறியாயா? லீலை—கருணை என்னும் நேர் முரண்பாடு கொண்ட தேவிகளை அங்கீகரித்துப் பராதீன னுகிப் பரவசப்படும் லீலாவிநோதன், எந்தக் கர்மமென் னும் பந்தத்தினுல் ஜீவாத்மாவை சுகதுக்கமென்னும்

நேர் முரண்பாடுகொண்ட பிரவாஹ மத்தியில் ஆழ்த்திக் கரைகாண முடியாது தவிக்கச் செய்தானந்திக்கிருனே அதே கர்மத்தின்பலனுகவே சுக்ருதமென்னும் வியாஜத்தைக்கொண்டு, அந்த ஜீவனைக் கர்ம பந்தத்தினின்றும் விடுவித்து ஸ்வயம் பிரகாசனுக்குவான்.

ஸுமதி.—இதுவரையிலும் ஜீவாத்மாவைக் கவனியாத பகவான், இனி இப்படிச்செய்ய முன்வருவானென்பது என்ன நிச்சயம்?

விவேக.—பேதாய்! உனக்குமா சந்தேகம்? ஒவ்வொரு ஜீவனுக்கும், அநாதியாகவும் விசித்ரமாகவு மிருக்கின்ற கர்மம், வாஸனை, ருசி, ப்ரகிருதிஸம்பந்தம் என்னும் சக்கரச்சுழல் உண்டு என்பது யாவரும் ஒப்புக்கொண்ட விஷயமே யல்லவா? அச்சுழலில், கர்மம், பரிபாகப்பட்டுப் பக்குவதசையை அடைய முயலுகையில், ஓர் அனுகூலபரிபாகத்தில், ஓர் வ்யாஜத்தினுல், ப்ரதமாசார்யனுன பகவான், ஜீவன்மீது அனுக்ரகித்து அவனை மோக்ஷஸாம்ராஜ்யத்திற்கு ஆளாக்குவான். அதுவரை, தாண்டுதற்கரிய சமுத்ர மத்தியிலுள்ள லங்காத்வீபத்தில் தசகண்டனுல் சிறை வைக்கப்பட்டிருந்த சீதையைப்போல், கரைகாணமுடியாத பவஸாகரஞ்சூழ்ந்த சரீரமென்னும் த்வீபத்தில், இந்த ஜீவாத்மாவும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களாகிய பத்துத் தலைகளையுடைய மனமென்னும் ராக்ஷஸனுல் பிடிக்கப்பட்டவனுய்ச் சிறைவாஸம் செய்ய வேண்டியதுதான். ஆஞ்சநேயனை முன்னிட்டுத் தனது சிறைமீட்சிக்காகப் பகவானது வருகையை எதிர்பார்த்து அழுது வருந்திக்கொண்டிருந்த அந்தச் சீதையைப்போல், இந்த

ஜீவனும் தகுந்ததோர் ஆசார்யானுக்ரகம் பெற்று பரிபக்குவமடைந்து பகவானது க்ருபாகடாக்ஷத்தால் தானிருந்து வரும் சிறையினின்றும் மீட்கப்பட வேண்டிய காலத்தை எதிர் நோக்கி வருந்த வேண்டியதே. ப்ரகிருதி ஸம்பந்தத்தால் ஒளியிழந்த ஜீவனது தேவியாம் புத்தியும், ஆசார்யோபதேச பாக்யம் கிடைக்குங் காலம் வரை, தானும் சக்தியற்றவளாகவேதான் இருக்க வேண்டி வருகிறது.

ஸுமதி.—கொடிது! கொடிது! புத்தியுடன் கூடிய ஜீவாத்மாவுக்கு மோக்ஷஸாம்ராஜ்யம் கிட்டுவது துர்லபமென்றே எனக்குத் தோன்றுகிறது.

விவேக.—அப்படி எண்ணாதே! தோஷரஹிதனானதோர் ஆசார்யனது கடாக்ஷமாகிய அமிர்தத்தால் அபிஷேகிக்கப்பட்ட ஜீவனுக்கே, பாக்யவசத்தால் பரப்பிரம்ம விஷயத்தில் பரபக்தியென்பது கைகூடும். சமம் தமம் முதலிய நற்குணங்களின் உதவியால் என்னையும் உன்னையுங்கொண்டு அந்தப் பக்தி பரிணாம ஸமயத்தில் ஓர் யஞ்ஞம் நடந்தேறும். அந்தக் காரணத்தால், பக்தஜீவனாகிய யாகப்பசு, கர்மமென்னும் பாசத்தை அறுத்துக் கொண்டு, ஸ்ரீமந் நாராயணனிடம் ஒப்படையும். ரக்ஷண பாரத்தைப் பரமாத்மாவிடம் ஒப்படைத்த க்ஷணத்திலேயே, லக்ஷ்மீபதியும் சரணாகதனான அந்தஜீவனுக்குப் பற்றில்லாததோர் நிலையைச்செய்து கொடுக்கிறான். மோக்ஷஸாம்ராஜ்யத்தை ஜீவன் அக்கணத்திலேயோ அல்லது ஜென்மாந்திரத்திலேயோ கோருகிறபடியே சரணாகத ரக்ஷகன் லபிக்கச்செய்வான். ஆகவே, வேதாந்தமென்னும் பட்டணத்தை அறிந்து சேர்ந்தவனே, பகவானு

டைய தயாரூபமான் ஒற்றையடிப்பாதை வழியாய் மோக்ஷமாகிற பட்டணத்தை யடையக்கூடியவனுவன். எனவே ஜீவன் மோக்ஷஸாம்ராஜ்யத்தை அடைவது துர்லபமல்ல என்பதை அறிவாய்.

ஸுமதி.—பிரபோ! 'அழுகிற குழந்தைக்குப் பழத்தைக்காட்டிச் சமாதானப்படுத்துவதுபோல், எனக்கு இவ்வார்த்தைகளைக் கூறியதால்மட்டும் தெளிவு ஏற்படுமா? மோக்ஷத்தில் ஆசையுடைய புருஷர்களால் பல தேவதைகளும் உபாஸிக்கப்படுகையில், ஸ்ரீலக்ஷ்மீபதியே மோக்ஷத்திற்கு மூலகாரணனென்று நீர் எப்படிச் சொல்லக் கூடும்? அந்த மூலகாரணனை அறியப் பலரும் பிரமிக்கையில், தாங்கள் அவனிடத்தில் முடிவான நிச்சயம் வைக்கக் காரணமென்ன? இந்த வேதாந்தங்களின் ஸாரார்த்தங்களை நான் அறிந்து ஜீவாத்மாவுக்குத் தெளிவிக்குமாறு உபதேசஞ் செய்தருள்வீராக.

விவேக.—அப்படியே சொல்லுகிறேன் கேள்: தாகவிடாயைப் போக்கப் பனித்துளிகளால் ஆகுமோ? சித்திரத்தில் எழுதப்பட்ட ஆயிரம் சூரியர்களை ஒன்று சேர்ப்பினும் துளி இருட்டாவது அகலுமோ? அதுபோலவே, ஸ்ரீயப்பதி விஷயத்தில் செய்யப்படுகின்ற பரமபக்தி தவிர்த்து, இதர தேவதைகளை உபாஸிப்பதால் ஸம்ஸாரத் துக்கமும் பந்தமுமாகிற இருள் நீங்குமோ? அவ்விருளை நீக்க வல்லது அந்தப் பகவானுடைய ஸங்கல்பமென்னும் ஸூர்யோதயமொன்றே! உன்மீதும் ஆஸ்திகத்தின் மீதும் ஆணையிட்டுக் கூறுகிறேன் நம்பு: அஹங்காரமென்னும் முதலையால் பிடிக்கப்பட்டு வருந்திக்கதறும் சரீரியென்னும் யானையை வெகுவேகமாய்க்

காத்ததனின்றுமே முராரியின் கருணை பிரபாவம் உனக்கு, விளங்க வில்லையா? ஆகவே அந்த லக்ஷ்மீ பதியை அடையவல்ல மார்க்கங்கள் பக்தியும் பிரபத்தியுமே. பக்தியோகஞ் செய்ய சிலருக்குத்தான் அதிகாரம் உண்டு. பிரபத்தியோ ஜாதிமத வித்யாஸமும், ஸ்திரீ புருஷ வித்யாஸமுமின்றி எல்லோராலும் அனுஷ்டிக்கக் கூடிய எளிதான மார்க்கமேயாகும். இந்தப் பிரபத்தியைத் தானுகவும் செய்யலாம். ஆசார்யனையும் தனக்காகச் செய்யும்படிப் பிரார்த்திக்கலாம். குறிவைத்து அடிப்பதற்குப் பழக்கம் வேண்டுவது போல, தானுகவே அனுஷ்டிப்பதற்குப் பழக்கம்வேண்டும். இந்தப் பிரபத்தி ஒரு க்ஷண காலத்தில் நடந்தேறக் கூடிய காரியம். அனுஷ்டானத்தில் ஏதேனும் குறைவு நேரிடினும் ஸ்ரீமந் நாராயணனுடைய பரம காருண்யத்தினுல் குறைவு குன்றி நிறைவு ஏற்படக்கூடியது. ஆனுல் பக்திமார்க்கமோ கஷ்டமும் பொறுமையும் கூடிய மார்க்கமாகும். இந்திரியங்களை அடக்கி, நிச்சல நிர்மல மனத்துடன், சதா பரந்தாமனைக் கோறி அனுஷ்டிக்கவேண்டிய யோகமாகும். ஒரே ஜன்மத்தில் முடியக் கூடாதுபோயினும் போகும். ஆயினும், ஜென்ம ஜென்மங்களாக விட்ட இடத்தினின்றும் தொட்டுப் பிடித்துப் பூர்த்திசெய்து கொள்ளக் கூடியது. சரணமடைந்தவன் எத்தகையோனுபினும் அவனை ரக்ஷிக்கவேண்டியதே முறையென்பது தொன்று தொட்டு ஸ்தாபிக்கப்பட்ட தருமமல்லவா? ஆகவே, பிரபத்தி செய்தோரைப் புறக்கணிக்கமாட்டான் பரமாத்மா : எனவே யாவரும் அறியத்தக்க தத்வம் அந்த ஸ்ரீமஹா விஷ்ணுவே! அதற்குப் பிரமாணங்கள் வேதவாக்யங்களே! இதை

அறிகின்றவர் ஸத்வம்மிகுந்த ஜீவன்களே! 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்' என்பதும் பொய்யோ?

ஸுமதி.—நாதா! தெளிவடைந்தேன். தன்னுடம்பிலுள்ள வியாதியைத் தானே அறிந்து போக்கிக்கொள்ள வழி தேடாத மூடர்களைப்போலல்லவா ஜீவன் பரிதபிக்கிறது!

கூஉவஉ ஒோவ்ணஎுவஸவ ஜி சுஜூகஹா சுஉகூ
ணவஸோஎுவஸூகூவிண சுஹொஉ மஉ நு வஙா!
தஹவி ஜூசுஹஹொஷஹமண உணூணிஹகூணி ஓ
கஹகஹகொவிஹஹணிஹிஉ௦ரீூஹஹஉ உணஹ௦!

குளவயி மோக்கணூஸவ மி யங்ககஹாகயியா
ணவஸமருஸூயாவி ணயஹோயிகயிந்தகடா -
தஹவி ஜூயந்தஹோந்ததண யிண்ணுணிஹக்கணி ஓ
கஹகஹகோவிஹந்தணிஹிளம்மு ஹளே யிணஹம்.

குந்தலவராளி—சாபு.

| | |
|---|---|
| ஸ ஸ ஸ - மா - மா | ப பா - தா - நித |
| கு ள வ - யி - மோக் | கணூ - ஸ - வ . |
| ப ப ப - தா - நி த | பா த - ப ம மா ‖ |
| மியங்க - க - ஹா. | க யி - யா . . ‖ |
| த த த - ஸ்ர—; | நீ நி - தா - தப |
| ணவஸ - ம —; | ருஸூ- யா - வி . |
| ப ம ப - தா - நி த | ப ப த - ப ம - மா ‖ |
| ணய . -ஹோ- யிக | யிந்தக - டா . - . ‖ |
| த த த - ஸ்ா - ஸ்ா | ம் ம்ா - ஸ் ஸ் - ஸ்ா |
| தஹவி - ஜூ- யங் | தஹோங் - த த - ண |
| த ஸ்ா - ஸ் நி - நி த | த ப த - ப ம - மா ‖ |
| யிண்ணு-ணி. -ஹக். | க . ணி-யோ. - . ‖ |

ம ம் ம - மா - ஸா ம பா - தா - நி த.
க ஹ க - ஹ - கோ வி . - ஹங்- தணி
ப பா - த த - நி த பா த - ப ம - மா ||
ஹிளம்-முஹ-ளே. யி ண -ஹம். - . ||

விவேக.—ப்ரியே! உன்னைத்துணையாய்க்கொண்ட எனக்கு இனி வெற்றி கிடைப்பது திண்ணமே. சத்ருக்களை ஜெயிக்க விரும்பும் என் ஆசையாகிய நீர்த்திவலை, ஸ்ரீயః பதியின் காருண்யப் பிரவாகத்தினுல் பெரு நதியாகி, விடாமுயற்சி யென்னும் கற்பகத் தருவை நனைத்து வளர்த்து என் இஷ்டத்தைப் பூர்த்தி செய்விக்கப்போகிறது சத்யமே: ஆகவே இதுகாறும் ஸ்வபக்ஷ பெருமையை நிலைநிறுத்துவதிலேயே கருத்துக் கொண்டிருந்த நாம், இனி நிர்ப்பயமாய் பரபக்ஷத்தை நிராகரித்துப் போக்கவேண்டிய வழிகளைத்தேடுவோம் வா.

(போகிருர்கள்.)



## மூன்ரும் காட்சி.

இடம் :—கங்கைக் கரையோரம்—ஓர் பூஞ்சோலைக்கு எதிரில்.

---

[விசாரணையும், சிரத்தையும் பிரவேசம்.]

விசா.—சகி! வேர்வையும் களைப்பும் காணப்பட்டும் உத்ஸாகம் குறையாது விரைந்து செல்லும் உனது காரியந்தான் யாதோ?

ஶ்ரத்.—வேதாந்த சித்தாந்த மல்லாதனவற்றைக் களைந்தெறிய கங்கணங்கட்டியிருக்கும் விவேக மகாராஜனது பிரதிஞ

ளை பூர்த்தியாக வேண்டி, மகாராணி ஸுமதி தேவியார் ஓர் மங்கள விரதம் கைக்கொண்டிருக்கின்றனள். அதற்காக, ஸ்ரீலக்ஷ்மீபதியின் பாதபங்கயங்களிடை அர்ச்சிக்கத்தகுந்த தாமரை மலர்களைக் கொண்டுவர எனக்கு ஆஞ்ஞை. அவைகளைத் தேடிக் கங்கையைநாடிச் செல்கிறேன் இவ்வளவு சிரமப்பட்டுக்கொண்டு.

விசா.—கங்கையும் அதோ நெருங்கிவிட்டது. இந்தப் பூஞ் சோலையில் சற்று இளைப்பாறிச் செல்லலாமே.

சிரத்.—செய்தால் போகிறது. நீ இந்தப் பிரதேசம் வந்த காரண மென்ன?

விசா.—விவேக ராஜனின் பிரதிஞ்ஞையைக் கேட்டறிந்த மகாமோகன் கோபாதீனனாகி, ஜீவாத்மாவைப் பலவிதத்திலும் பிடித்து, கபட யுக்திகள் செய்து புத்திமாறாட்டத்திற்கு ஆளாக்கி வருத்துவதற்கு ஏற்பாடு செய்து வருவது நம் ராணியாருக்குத் தெரிந்தது. தக்ஷணமே விரோதிகளது சூழ்ச்சிகளை ஸேனாபதியாகிய வ்யவஸாயனிடம் ஏகாந்தத்தில் தெரிவித்து வருமாறு ஸுமதி தேவியார் என்னை அனுப்பி யிருக்கிறார்கள்.

சிரத்.—பேய்களின் விவாகத்தில் கழுதைகள் பாடுவதுபோல் தான் மகாமோகன் பிரயத்தனத்தில் கபட வாதிகளின் கோலாகலம்! இவர்கள் கொள்கை நிலையற்றது. சத்யமே நித்யமானது. விவேக ராஜனே முடிவில் வெற்றி பெறுவார் காண்.

விசா.—அப்படியேதான் ஆகவேண்டும். நாழிகையாகிறது. நான் ஸேனாபதியைநாடிச் செல்லவேண்டும்.

**சிரத்.**—செய். நானும் மலர்களைக் கொய்து செல்கிறேன். சீக்கிரத்திலேயே இருவரும் அரண்மனையில் திரும்ப ஸந்திப்போம்.

(போகிறார்கள்.)



## நான்காம் காட்சி.

இடம் :—வாத மண்டபம்.

---

[விவேக ராஜனும், ஸேனாபதி வ்யவஸாயனும் பிரவேசம்.]

**விவேக.**—பாதகங்களைப் பரவச்செய்யும் மகாமோகனே! நிஷ்காரண த்வேஷங்கொண்டு கலகத்துக்காகவே கபடஸித்தாந்திகளை ஏற்படுத்தி, அன்னாது சிஷ்ய வர்க்கங்களை விருத்தி செய்வித்தோ என் அபீஷ்டத்தைக் கெடுக்கப்பார்க்கிறாய்?...இதோ, நானும், எனது ஸித்தாந்திகளையும் சிஷ்யர்களையும் பரவச்செய்து, மோகித்த ஜீவனை விடுவிக்கிறேன் பார் அப்பாசங்களினின்றும்! என் கோறிக்கை ஈடேற ஸ்ரீஹயக்ரீவ மூர்த்திதான் அனுக்ரஹித்தருளவேண்டும்.

(தியானம் செய்கிறார்கள்.)

𑌸𑌮𑌾𑌹𑌾𑌰𑌸𑍍𑌸𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑌮𑍃𑌚𑌾𑌂 𑌧𑌾𑌮 𑌯𑌜𑍁𑌷𑌾𑌂

𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍂𑌹𑌾𑌨𑌾𑌂 𑌲𑌹𑌰𑌿 𑌵𑌿𑌤𑌤𑌿𑌰𑍍𑌬𑍋𑌧𑌜𑌲𑌧𑍇𑌃 ।

𑌕𑌥𑌾𑌦𑌰𑍍𑌪𑌕𑍍𑌷𑍁𑌭𑍍𑌯𑌤𑍍𑌕𑌥𑌕 𑌕𑍁𑌲 𑌕𑍋𑌲𑌾 𑌹𑌲𑌭𑌵𑌂

𑌹𑌰𑌨𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌤𑌰𑍍𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌂 𑌹𑌯𑌵𑌦𑌨 𑌹𑍇𑌷𑌾 𑌹𑌲𑌹𑌲𑌃 ॥

ஸமாஹாரஸ்ஸாம்நாம் ப்ரதிபதம்ருசாந்தாம யஜுஷாம்
லய:ப்ரத்யூஹாநாம் லஹரிவிததிர்போதஜலதே: -
கதாதர்பக்ஷுப்யத்ப்ரதி கதக கோலா ஹலபவம்
ஹரத்வந்தர்த்வாந்தம் ஹயவதந ஹேஷா ஹலஹல:

## கல்யாணி — ஆதி.

ஸ்ா ஸ்ா - நி த ப ம — ப த ப ம - கா கா
ஸ மா - ஹா. ர : —ஸாம்.ஞம். - ப்ரதி

மா பா - த த தா நி த ஸ் நி - ஸ் ஸ் ஸ்ா ||
ப த - ம்ரு.சாம். தா . ம . - யஜுஷாம் ||

ஸ் ஸ் ஸ் நி - ஸ்ா ரி· க்—ரி· ஸ் ஸ் நி - த ப தா
லய : . - ப்ர த்யூ .—ஹா .ஞம் . - லஹரி

ஸ் ஸ் ஸ் ரி· - நி த ப ம ப த ப ம - க ரி· ஸ ||
வி த திர் . - போ . த . ஜ . ல . - தே . : ||

க்ா க் ரி· - க்ா க் ரி·—ரி· ஸ் க் ரி· - ரி· ஸ ஸ நி
க தா . - தர்ப்ப . —க்ஷுப்.யத். - ப்ர . தி .

ஸ் ரி· ஸ் நி - தா நீ பா தா - நீ ஸ்ா ||
க த க . - கோலா ஹ ல - பவம் ||

ஸ்ா ஸ்ரி· - நீ நி ஸ்—ஸ் த த நி - நி ப ப த
ஹ ரத் . - வந்தர்.—த்வாந்.தம். - ஹ . ய .

நி நி ஸ் ரி· - நி த ப ம ப த ப ம - க ரீ ஸ ||
வ த ந . - ஹே.ஷா. ஹலஹ . - ல . : ||

வ்யவ.—பிரபோ! வெற்றிக்குச் சற்றும் சந்தேகமில்லை. புருஷனுக்கு வேதாந்தத்தில் உண்மையான ஞானம் உம்மால் உண்டாக்கப்பட்டு விட்டது. சிரத்தை குறைவு மாத்திரமே விலக்கப் படவேண்டியதாயிருக்கிறது. சத்ருபக்ஷத்தைக் களைவதற்காகத் தம்மால் நியமிக்கப்பட்ட வாதத்துடன் வேதாந்த ஸித்தாந்தம் இதோ வருகிறார் பாரும்.

[அவ்விருவரும் ஓர் புறமாய் நின்று கவனிக்க, ஆசார்ய சிஷ்ய பாவனையுடன் ஸித்தாந்தமும் வாதமும் பிரவேசம்.]

ஆசார்—ஆயுஷ்மன்! பந்தக்காலை அனசத்தசைத்தே மணலிலிறக்கி உறுதி செய்வதுபோல, சத்ருவாதிகளாகிற ராக்ஷஸர்களுக்கு ஹநுமானையொத்த உன்னால், நமது வேதாந்த தத்வார்த்தங்கள், திடமாக ஸ்தாபிக்கப்படுமென்று நம்புகிறேன்.

சிஷ்.—பகவன்! (ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்கிறார்.)

𑌉𑌪𑌵𑍀𑌤𑌿𑌨𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌂 ।
𑌤𑍍𑌰𑌿𑌜𑌗𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 𑌤𑍍𑌰𑌿𑌦𑌣𑍍𑌡𑌹𑌸𑍍𑌤𑌂 ॥
𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌸𑌾𑌰𑍍𑌥𑌵𑌾𑌹𑌕𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 ।
𑌶𑌿𑌖𑌯𑌾 𑌶𑍇𑌖𑌰𑌿𑌣𑌂 𑌭𑌜𑌾𑌮𑌿 ॥

உபவிதி நமூர்த்வபுண்டர வந்தம்
த்ரிஜகத்புண்ய பலம்த்ரிதண்டஹஸ்தம் -
சரணாகதஸார்த்த வாஹகந்த்வாம்
சிகாயசேகராலிநம் பஜாமி.

### கமாஸ்—ஆதி.

;;;=தா!நீஸா ; நீ ஸா ; - நீ தா நீ ஸா ; நீ ||
;;;=உ ப வீ ; தி னம்; - .ஊர்த் வ புண்ட்;ர ||

நீ, தபம= மக மா பா ; நித பமக மா, நித நி ப-த நி ஸா நீ ||
வந், தம். .= த்ரிஜகத் புண், ய. ப . . லம், த்ரி. தண்..ட' • ஹஸ் ||

ஸா;;=ஸா நீ ஸா; ஸக் க்ா;;— மா க்ா ஸா; நீ ||
தம்;;= ச ர ணு ; க . த ;;—ஸார்த் த வா ; ஹ ||

நீ , தா , = த நிஸா நீ ; தா பாபா:—பா மாபா—; நித ||
கம், த்வாம்,= சி . கையர்; சே க ர ;—சா லினம்—; ப. ||

பமகமா, ||
ஜா . . மி, ||

---

ஆசார்.—

[illegible]
[illegible]

ப்ரதிஷ்டாபித வேதாந்த: ப்ரதிக்ஷிப்த பஹிர்மத: -
பூயாஸ்த்ரை வித்யமாந்யஸ்த்வம் பூரிகல்யாண பாஜநம்.

### சங்கராபரணம்—ரூபகம்.

;=ஸ் ஸ் ஸ் நி தப ; பம க ம கா—மாபா—மக பம ||
;=ப்ரதிஷ்டா. பி. ; த . வே . . —தாந் .—த . : . ||
, ரி =பாமா ப த நீ நிப தா நீ-; ஸர் ஸா ஸா ||
, . =ப்ரதி க்ஷிப் . . த . பஹிர்-; ம த : ||
;=ஸா நீ ஸ் க் ரீ ஸா நீதா— நீ ஸா - ஸா ஸா ||
;=பூ யாஸ்த்ரை . . வித் ய .—மான் . - யஸ்த்வம் ||
;=ஸா நீ—தப ; - பம மக மத பா—மபகரிஸா ||
;=பூ ரி - கல். ; - யா . ண . பா. . —ஜ.னம் . . ||

ஆசார்.—ஆயுஷ்மன்! பரமத கண்டனஞ் செய்து நிகமாந்த ஸித்தாந்தத்தை ஸ்தாபித்து ஸர்வ மங்களத்துடனும் விளங்குவாயாக.

(ஓர் திவ்ய பவித்ரத்தைக் கொடுக்கிறார்.)

சிஷ்.—(பவித்ரத்தை வாங்கிச் சிரமேலணிந்து விரல்களில் தரித்துக்கொள்கிறார்.)

சிஷ்.—பொய்யாமொழியீர்! கேட்க யோக்தையுள்ளவனென்று கருதப்படுவேனாகில் சில சந்தேகங்களைக் கேட்டு நிவர்த்தித்துக் கொள்ள ஆஸ்தைப்படுகிறேன்.

ஆசார்.—ச்ரேயஸ் மிகுந்த சிஷ்யனுக்கு ஸம்சயம் வாய்த்த போது சொல்லத் தகாதது முண்டோ?—. உன் ஸம்சயம் யாது?

சிஷ்.—பகவந்! வாதத்தில் வெற்றிபெற்றவர் ச்மசாநத்தில் மலட்டு மரமாகப் பிறப்பார்கள் என்பது மகரிஷிகள் வாக்காயிற்றே! அப்படியிருக்க, அடியேன், எதிரிகளை வாதித்து ஜெயிக்கவேண்டுமென்று எப்படி விரும்புவது?

ஆசார்.—பத்ர! நன்றாய்க் கேட்டனை!—விதி நிஷேதங்களாகிற செய்யத்தக்கனவும், செய்யத் தகாதனவுமாகிற காரியங்கள் யாவும், வர்ணம், ஆச்ரமம், ஜாதி, கோத்ரம், ப்ரவரம், குலம், சரணம், இடம், காலம் இவைகளைப் பொறுத்ததல்லவா? விச்வாமித்ரரது நியமனப்படி ஸ்ரீராகவன் யாக ரக்ஷணம் செய்ததுபோல, நீயும் என்னுடைய அதிகாரம் பெற்றவனாய், விரக்தர்களோடு ப்ரஸங்கிக்கும்வேளை தவிர்த்து, ப்ரதிவாதிகளை எதிர்க்

கும் காலத்தில், பலே அதிபலே என்பதைப் போன்ற வீரவாதம் விதண்டாவாதங்களால் ஜெயிப்பாயாதலால், இத்தகைய விலக்குகளுக்கு இலக்காகமாட்டாய்.

சிஷ்.—பாக்யம்: எந்த ஸித்தாந்தத்தை ஆதாரமாக வைத்துக் கொள்ள வேண்டுமோ அதை அடியேனுக்கு அனுக்ரஹித்தருள வேண்டும்.

ஆசார்.—பத்ர! ஸ்வகோஷ்டி வாதங்களில், இரு கக்ஷியினரும் ஒப்புக்கொண்ட பிரமாணத்திலேயே நிற்கக்கடவாய். பராசரர், வியாஸர், சுகர், சௌநகர், போதாயனர் முதலானோரது வழிகளைப்பற்றியதான நமது ஐந்தாறு கிரந்தங்கள் இருக்கின்றன. அவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு, நீ கூறும் பிரமாணங்களும் யுக்திகளும் ஸபையோர்களது மனத்தில் அழுந்தி அவர்களை மகிழ்விக்கக் கூடியனவா யிருத்தல் வேண்டும்.

சிஷ்.—பகவந்! ஓர் ஸம்சயம்:—

ஆசார்.—என்ன?

சிஷ்.—தானே தர்மோபதேசஞ் செய்து, அதற்கு விரோதமாக ஜீவன்களை நடக்கும்படித் தானே நியமிக்கிற பகவானை. எப்படி ஆப்தன் என்று சொல்லக்கூடும்?

ஆசார்.—ஓ! ஓ! மிகவும் ஸூக்ஷ்மமான அர்த்தத்தையே கேட்டனை!

சிஷ்.—மேலும், எப்பேர்க்கொத்தவனுக்கும், சிற்சில காரணங்களினால், எதனாலும் தடுக்க முடியாததாக சம்பவிக்கக்கூடிய பாபங்களை விட்டுவிட வேண்டுமென்று விதித்திருக்கிறதே, அது எப்படி ஆகக்கூடியது?

ஆசார்.—அதிஸூக்ஷ்மமான கேள்வியே இது!

சிஷ்.—தவிற, தன் நியமனத்தினாலேயே பாபாதிகளில் பிரவேசிக்கும் ஜீவனுக்கும், அந்தப் பகவான் தானே தண்டனைகள் விதிப்பது எப்படி நியாயமாகும்?

ஆசார்.—நன்றாய்க் கேட்டனை! இவைகள் எதிலும் ஒருவித விரோதமுமில்லை. ஏனெனில், கர்மம் என்னும் ஒருகாரணமே இம்மூன்று கேள்விகளுக்கும் ஏற்ற சமாதானமாகிறது. பகவானது இச்சை, அநாதியான கர்மவாஸனையின் காரணத்தால் ஜீவனைத் தடுக்கமுடியாத பாபத்திற்குள்ளாக்குகிறது. அந்தக் கர்மவசமானவனுக்கும், ஸுகிருதம் பரிபாகம் அடையுங் காலத்தில், அந்தப் பாபங்களையும் தடுக்கவல்ல கர்மங்களினாலேயே பாபங்களை நிவ்ருத்தி செய்யப் பிரயத்தனம் ஸம்பவிக்கும். அப்படிக்கல்லாதவனுக்கு, அவனவன் கர்மானுஸாரமான பலம் லபிக்கவேண்டியதே முறை. ஆதலால், பகவான் ஆப்தனென்பதிலும், பாபம் நிவ்ருத்திக்கக்கூடியதென்பதிலும், தண்டனை அவச்யமேயென்பதிலும் விரோதமேது மில்லையல்லவா?

சிஷ்.—(குதூகலத்துடன்) தெளிந்தேன்! தெளிந்தேன்!—. (திரும்பிப் பார்த்து) அடே மூர்க்கர்களே! எங்கள் மதப்பெருக்கைச் சிறியதென்று அவமதிக்கிறீர்கள்? அநேகம் கந்தைகளால் முடிந்து ஒன்றாக்கப்பட்ட உங்கள் ஸித்தாந்தங்கள் யாவற்றினையும் இதோ கிழித்தெறிந்து உதறியெரிகிறேன் காணுங்கள்:...என்ன?...என்ன?... (செவிசாய்த்துக்கேட்டு) இது புது மதமா?...ஹ! ஹ! ஹ! (கைகொட்டிச் சிரித்து) எந்தப்பொருளும், உண்டா

கும் பொழுது புதியதுதான். நாளா விருத்தியில் இந்தப் புதியதே பழையதாகி விடுகிறது! புதியதும் பழைய துமா யிருத்தல் குணத்துக்கும் தோஷத்துக்கும் கார ணமாகாது. எது வஸ்துவின் உண்மையை அனுஸரித்த தோ அதுவே புத்திசாலிகளால் நம்பத்தக்கதாகும். எம் மதமும் புதியதல்லவே!

ஆசார்.—பத்ர! கபட வாதிகளைப் பேதித்தெறியக் கூடிய யோக்யதை பெற்றுள்ள உனக்கேற்ற ஸபாத்யக்ஷரும் ஸப்யரும் இல்லையே என்றுதான் சிந்திக்கிறேன்.

விவேக.—(ஒருபுறமாய்: ஸேனுபதியுடன்) ஸேனுபதி! நாம் இவர்கள்முன் தோன்ற இதுதான் ஸமயம் (முன் வந்து நமஸ்கரிக்கின்றனர்.)

ஆசார்.—ஸர்வமங்களானி பவந்து! ஹே ராஜன்! கோமுக வியாக்ரர்களை நிக்ரஹிக்கும் பகவான், உம்மை ரக்ஷித்து வேதத்தை நிலை நிறுத்திக் கொள்வாராக!

விவேக.—பாக்யம்!

ஆசார்.—ராஜன்! நற்சமயத்திலேயே வந்தீர்கள்! உமது இஷ்டபூர்த்தியை இந்தச் சிஷ்யன் மூலமாய் அடைவீ ராக! உமது ஏவல்களைச் செய்து முடிக்கச் சித்தமாய் உள்ளன் இவன்.

விவேக.—நியமனம்!—. (சிஷ்யனைநோக்கி)—ஸௌம்ய! நீரே வாதிராஜனுகுவீர்! ஸாத்விகர்களது சேர்க்கையும் அனுக்ரகமும் கிடைக்கும்படி நடந்து கொள்ளும். பெரியோர்களது அனுஷ்டானத்தையே நிலைநிறுத்தும். பிரம்ம வித்துக்களுடைய அபசாரம் பெருதேயும்.

ஸர்வாபசாரங்களையும் பாறுக்க வல்லவனான ஸ்ரீமந் நாராயணனிடத்திலேயே எல்லா பாரத்தையும் ஒப்புவித்து, அவனது ஆஞ்ஞாநுக்ஞா காரியங்களையே செய்து கொண்டிரும். வேதாந்த வாக்யங்களையே சதா பரிசயம் செய்து கொண்டிரும். பெரியோர்களுக்கே சர்வதா சிச்ருஷை செய்து கொண்டிரும். வேதாந்த விரோதிகளை திரஸ்காரஞ் செய்யும்.

ஆசார்.—ஆயுஷ்மந்! ஸாவதானத்துடன் கேட்டுக் கொள்ளும் அவ்வளவையும்.

சிஷ்.—அநுக்ரஹம்!

விவேக.—ஒரு பானை ஸாதத்திற்கு ஒரு அவிழ்ை பதம் போலவும், மாற்றுப் பார்க்கும் நிமித்தம் தங்கக்கட்டி பூருவாகவும் உரைக்கப் படாதது போலவும், ப்ரமாண மார்க்கத்தை விட்டு நழுவின முக்யாம்சங்களையே எடுத்து, கோடி காண்பிப்பதுபோல, வாதிகளை வென்றால் போதுமானது.

சிஷ்.—உத்கிரவு!—என்னுடன் வாதத்திற்கு வருபவர்கள் வரட்டும்.—

𑌜𑌯𑌤𑌿𑌸𑌕𑌲𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑌾𑌹𑌿𑌨𑍀 𑌜𑌨𑍍𑌮𑌶𑍈𑌲𑍋
𑌜𑌨𑌿𑌪𑌥𑌪𑌰𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌶𑌾𑌖𑍀 ।
𑌨𑌿𑌖𑌿𑌲𑌕𑍁𑌮𑌤𑌿𑌮𑌾𑌯𑌾 𑌶𑌰𑍍𑌵𑌰𑍀𑌬𑌾𑌲𑌸𑍂𑌰𑍍𑌯𑍋
𑌨𑌿𑌗𑌮𑌜𑌲𑌧𑌿 𑌵𑍇𑌲𑌾 𑌪𑍂𑌰𑍍𑌣𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 ॥

ஜயதிஸகலவித்யா வாஹிநீ ஜந்மசைலோ
ஜநிபத பரிவிருத்திச்ராந்த விச்ராந்திசாகீ-
நிகிலகுமதிமாயா சர்வரீபால ஸூர்யோ
நிகமஜலதி வேலா பூர்ண சந்த்ரோயதீந்த்ர:

## பைரவி—சாபு.

| | |
|---|---|
| ;;=நி நி நீ ; நீ | நீ நீ ; தா ; நீ ; |
| ;;=ஜயதி ; ஸ | கல ;வித்;யா ; |
| ;;=தா நீ ஸ்ா ; நீ | ரீ· ஸ்ா நீ - நீ தா - தா பா ॥ |
| ;;=வாஹினீ ; ஜன் | ம . . - சை . - லோ . ॥ |
| ;;=ப ம பா நீ தா பா | ம க ப ம கா ரீ ; ஸா ; |
| ;;=ஜனிப . . த | ப . ரி . .வ்ருத்தி ; |
| ;;=ரி க மா பா ; பா | பா பாமா நீ ; தா பா ॥ |
| ;;=ச்ராங் . த . ; வி | ச்ராந்தி . .சா ; கி . ॥ |
| ;;=த நி ஸ்ா ; ரீ· ; | ரீ· ரீ· ; க்ா ; ரீ· ; |
| ;;=நி கி ல ; கு ; | ம தி ; மா ; யா : |
| ;=ஸ்ா ஸ்நி ஸ்ா ; ரீ· ; | ஸ்ா ரி· ஸ் நீ தா ; பா ; ॥ |
| = . சர் . வ ; ரீ ; | பா . ல . ஸூர்;யோ; ॥ |
| ;;=த நி ஸ்ா ; ரீ· ; | ஸ்ா ரி· ஸ் நீ தா ; பா ; |
| ;;=நி க ம ; ஜ ; | ல . தி . வே ; லா ; |
| ;;=ப ம பா நீ தா பா | ம ப ம க ; ரீ ; ஸா ; ॥ |
| ;;=பூர்ணசந்த் . . ரோ. | ய .தீந்த். ; ர ; : ; ॥ |

(திரைக்குள்).—"ஸேதுமுதல் ஹிமாசலம் வரையிலுமுள்ள எந்த வித்தாந்தவாதிகளையும் நாங்கள் லக்ஷியஞ் செய்யமாட்டோம்."

வ்யவ.—கேட்டீர்களா? கபடவாதிகளது வீரவாதத்தைக் கேட்டீர்களா?

ஈஷ.—கேவலம் தமது உத்ஸாகத்தையே ஸாதனமாகக் கொண்ட கபடவாதிகளெல்லோரும் ஏககாலத்தில் எதிர்த்தாலும் எனக்கெதிர் நிற்கமாட்டுவரோ? குருடனுக்குக் குருடன் கோல் கொடுக்கும் கதையல்லவா இவர்கள்

வாதம்! நம் யதிராஜனால் பிரகாசிக்கப்பட்டதும், அஞ்ஞானமென்னும் இருட்டிற்கு விடியற்காலமானதுமாகிய சரீர சரீரிபாவமென்னும் ப்ரதிதந்திரத்தை எவன் அறிகின்றானோ, அந்த மஹானைக்கண்ட மாத்திரத்திலேயே, தத்தம் மதஸ்தாபனத்திலேயே குதூகலித்துத் துள்ளும் கபடவாதமென்னும் பெருமுழக்கம் கணப்பொழுதில் விநாச மடையுமல்லவா?

வ்யவ.—நன்கு கூறினீர்! இனி, ப்ரதிவாதிகளது கொள்கைகளை ஒவ்வொன்றாகக் கண்டனஞ் செய்வோம்—.

சிஷ்.—அப்படியே!

ஆசார்.—ஸௌம்ய! ப்ரகிருதியையும் ஜீவாத்மாவையும் பிரித்துவிட்டு, பரபுருஷன் என்ற ஒருவன் இல்லையென்னும் சாங்கிய மதத்திற்கு என்ன பதில் சொல்லுவாய்?

சிஷ்.—(ஆசார்யனையும் ஸபையோரையும் வணங்கி)—. பிரக்ருதியும் ஜீவாத்மாவும் சுருதி பலத்தால் இவர்களால் அங்கீகரிக்கப்படுமாயின், அதே அநேகம் சுருதிகளுக்கும் நாதனான அந்தப் பரமபுருஷன் மாத்திரம் ஏன் கிடையாது? யோக சாஸ்திராப்பியாச காரணத்தால், பரமபுருஷனுடைய ஐச்வரியத்தைப் பிரதிபிம்பத்துக்குச் சமானமாகக் கூறுகிறார்களே இவர்கள்—. ஈச்வரனுக்கு ஞானம், சக்தி, பலம் முதலியகுண ஐச்வர்யங்கள் ஸ்வபாவமாகவே உண்டு என்கிற வேத வாக்கியங்களுக்கு ஏன் பதில் சொல்லவில்லை?

வ்யவ.—நன்றாய்க் கண்டனம் செய்தார்.—கணாதருடைய மதத்திற்குப் பதில் என்ன?

சிஷ்.—பதிலா?—. மோக்ஷானுபவம் ஆனந்தரூபமன்று என்றும், அஃது பாஷாணத்தை யொத்தது என்று மல்லவா கூறுகிறார்கள் இந்த வாதிகள்? அப்படியாயின், கும்பகர்ணனுடைய அனுபவமே பரமசுகமானதாகிறது இவர்கள் வாதப்படி! அவன் தூக்கம் சாபமல்ல, அனுக்ரகமே ஆகிறதல்லவா இந்தக் கக்ஷியின்படி?

வ்யவ.—ஒரே வார்த்தையில் கண்டித்து விட்டீர்!—. க்ஷணந்தோறும் ப்ரபஞ்சம் நாசமடைகிறதென்று வாதிப்போரை அடக்கும் முறை?

சிஷ்ய.—பலமற்ற அக்கக்ஷியினரைப் பற்றியும் பேசவேண்டுமோ? ஒருவரை யொருவர் பொய்யனென்று சொல்லிக் கொள்ளும் பல பிரிவுகள் கொண்ட இவர்கள், தங்கள் தங்கள் வாதத்தை அறிந்து ஸ்திரப்படுத்தப் பார்க்கிறார்களா, அல்லது, சொல்வதை அறிந்து கொள்ளாமலேயே பொய் யென்று பிதற்றித் திரிகிறார்களா!

வ்யவ.—(ச்லாகையோடு)—. சுருக்கமாயும் கம்பீரமாயும் இருக்கிறது பதில்!—. ஆயினும், உலகமே பொய் யென்று ஒரு சாரார் வாதிக்கிறார்களே—.அவர்களுக்கு என்ன பதில்?

சிஷ்.—தன்னைப்பெற்ற தாய் மலடி என்று வாதிப்பவனுடன் பிரதிவாதம் செய்து என்ன பிரயோஜனம்?

[திரைக்குள். ‘பிசாசுகள் - பிசாசுகள்’ என்ற கூச்சல்.]

வ்யவ.—அது ஒரு மதஸ்தர்கள் கூச்சல்! அவர்களையும் நிராகரிக்கவேண்டும் நாம்!

சிஷ்.—தவறுதல் தவிர்த்த வேறு விஷயம் இவரிடம் கிடையாது. 'உண்டு' என்பதை 'இல்லை' யென்பார்கள். 'இல்லை' என்று கூறியதையே 'உண்டு' என்பார்கள். முரண்பாடுகொண்ட இவர்கள் வார்த்தைகளை இவர்கள் மதத்தைக் கண்டிக்கப் போதுமானதாகும். வேதமார்க்கத்தை இவர்கள் தூஷித்ததால், தேவதைகளே இவர்களுக்குத் தகுந்த தண்டனை விதித்திருக்கிறார்கள். தங்கள் தலைமயிரைத் தாங்களே பிடுங்கிக் கொள்ள விதிக்கப்பட்டிருக்கும் இவர்களது அவஸ்தையே இவர்களுக்குப் போதுமான கண்டன தண்டனையாகும்.

(உள்ளே, பேரிரைச்சல், இடிமுழக்கம், காரிருள், கனத்தமழை)

வ்யவ.—கேட்டீர்களா! ஸூர்யஸ்தம்பனம் முதலியது செய்துவரும் திகம்பரர் நமது கண்டனத்தைக் கண்டு சகியாது, வஞ்சனையால் இந்த அகாலமழையை உண்டாக்கி ஜனங்களை மருளச்செய்து தமது சித்தாந்தத்திலேயே நம்பிக்கை யுண்டாக்க முயல்கிறார்! இவர்களை இக்கணமே கண்டித்தல் வேண்டும்!

ஆசார்.—தன்னைச் சரண மடைந்தவர்கள் உழன்று தவிக்கும் ஸம்ஸார ஸாகரத்தைப் பானஞ்செய்து, ஜீவனைக் கரையேற்றுவிப்பவனான ஸாக்ஷாத் பகவான், இவ்வஞ்சனைகளைத் தானே கண்டனஞ்செய்யக் காத்திருக்க, நாம் கவலை கொள்வானேன்?

(இரைச்சலடங்கி, மழை நின்று, வெளிச்சம் பிரகாசிக்கிறது.)

யாவரும்.—ஆச்சர்யம்! ஆச்சர்யம்! பகவான் பிரஸந்நனே!—பிரஸந்நனே!

விவேக.—குரோ! தேவரீர் சிஷ்யர் மற்றொரு வேதவ்யாஸர் போல, பாஞ்சராத்ர மகிமையைத் தெளிவுற ஸ்தாபித்தார்! கௌமாரில கக்ஷியாரது கொள்கையையும் கண்டனஞ் செய்யும் மார்க்கம் கூறில், நம் சித்தாந்த வாதம் பூர்ணமாகுமென்று நம்புகிறேன்.

ஆசார்.—வேத ஸம்ரக்ஷகர்களாயும், வேதாந்தத்தை விட்டவர்களாயுமிருக்கிற கௌமாரிலாதியோர், ஸந்தோஷப்படுத்தவும், பயமுறுத்தப்படவும் தக்கவர்களே.

சிஷ்.—'தலையில்லாத உடல்'—. அவ்வளவே தான் அவர்கள் சித்தாந்தம்.

விவேக.—பாஷண்டிகளாற் சூழப்பட்ட இந்தக்காலம், மஹாஸமர்த்த வாதியான உம்மால் புண்யமடைந்ததாகவே ஆகிறது!

வ்யவ.—அரசே! இவருக்குத் தகுந்ததோர் ஸம்மானஞ் செய்தருளவேண்டும்.

சிஷ்.—ஆசார்ய ச்ரேஷ்டரது அனுக்ரகமும், இந்த மகாராஜனது கடாக்ஷமும் கிருபையுமே எனக்குப் போதுமான ஸம்மானமாகும்!

விவேக.—பகவந்! ஸேனுபதி கூறியது நியாயமே—. ஸ்வாமின்! தாங்கள் பூஜ்யரே!

சிஷ்ய.—ஆயின், அடியேனது ஆசார்யச்ரேஷ்டரான இந்த பகவானே தமது பூஜைக்கு அர்ஹராகிறூர்.

ஆசார்.—என் நியமனத்தால் நீயும் ஸம்மானிக்கத் தகுந்தவனே!

விவேக.—பகவந்! தேவரீரது சிஷ்யர் வேதாந்த ஸித்தாந்தத்தை ஸ்தாபித்தார். இவரால், தத்வஞ்ஞானம் மிகவும் உறுதியாக உண்டாக்கப்பட்டதென நகரத்தில் தண்டோராபோடப்படட்டும். இந்தக் கடகத்தைத் தன் இடது காலில் இந்த வாதிகேஸரி அணிந்து கொள்ள வேண்டும்.

(கடகத்தைக் கொடுக்கிறார்.)

சிஷ்.—(ஆசார்யனை நோக்கியவண்ணம் மௌனம்.)

ஆசார்.—ராஜாஞ்ஞை மீறத்தகாதது. அப்படியே செய்வாயாக!

சிஷ்.—நியமனப்படியே—.

(கடகத்தை வாங்கிக் கொள்கிறார்.)

ஆசார்.—ஆயுஷ்மன்! இனி நீ செய்யவேண்டிய கடமைகளைக் கூறுகிறேன் கேள்.—பணம், கியாதி, பூஜை, இவைகளை அடைவதில் ஆசை வையாதே. உத்தம சிஷ்யர்கள் கிடைக்குமிடத்து எவ்விதப் பிரதிப்ரயோஜனமும் எதிர்பாராமல் அவர்களுக்கு வேதாந்த சாஸ்திரப் ப்ரவசனம் செய்வதையே விரதமாகக் கொள்ளவேண்டும்.

சிஷ்.—பகவந் நியமனப்படியே!

விவேக.—தமது ஆஞ்ஞையை ஊக்கத்துடன் நிறைவேற்றுவிக்க இப்பொழுதே புறப்படும். நாங்களும் சத்ருக்களின் சேனையை நாசம் செய்வதற்காகப் பிரயத்தனிக்க இதோ செல்கிறோம்.

(போகிறார்கள்—திரை விழுகிறது.)



## ஐந்தாம் காட்சி.

### இடம் :—ஓர் காட்டுப்பாதை.

---

[ராகனும், த்வேஷனும் பிரவேசிக்கிறார்கள்.]

ராகன்.—நண்ப! விவேகனது வஞ்சனையினால் மகாமோக ராஜன் வளர்த்துவந்த பல்வேறு ஸித்தாந்தங்களெல்லாம் தீவிரமாய்க் கண்டிக்கப்பட்டன. இனி உன் உதவியினால்தான் நான் மகாமோக ராஜ்யத்தைத் திரும்பவும் நிலைநிறுத்த முயலவேண்டும். நமது முதல் முயற்சி விரக்தியையும் விஷ்ணுபக்தியையும் ஜீவனை அணுகாதிருக்கச் செய்வதேயாகும். மாரீசன் வஞ்சனையினால் ராமனைச் சீதையிடமிருந்து அகற்றினதுபோல, நானும் விரக்தியை விரட்டிவிடுகிறேன். ராவணன் சீதையை அபகரித்துச்சென்றது போல, நீயும் அதேசமயம் விஷ்ணுபக்தியைப் பலாத்கரித்தேனும் விலக்கவேண்டும். தெரிந்ததா?

த்வே.— அப்படியே.

ராகன்.—அற்பசுகத்தை இச்சிப்பவன் ஆசைக்காரன் எனப்படுவானாயின், பேரின்பமென்பதைக் கோறுபவன் பேராசைக் காரனாகிறானல்லவா? அன்னானுக்கு விரக்தி எப்படி உண்டாகக் கூடும்? 'தன்னைத்தானே அடைவது' என்றதே சுகமாகுமா? மற்றொன்றை அனுபவிப்பதினாலல்லவா சுக மேற்படக்கூடும்? ஆகவே, காமமேயன்றோ பிரஸித்தமான புருஷார்த்தமாகக் கூடியது!

த்வே.—நன்றாய் சொன்னாய் ஹா! ஹா! இந்த உலகம் பரமாத்மாவுக்குச் சரீரமாம்! உலகமோ துக்கம் நிறைந்

தது. ஆகவே பரமாத்மாவும் துக்கத்தை அடைந்த வனல்லவா? பரமாத்மாவை அடைவதால் துக்கம் எப்படி நிவ்ருத்தியாகக்கூடும்? அப்படிக்கின்றி, அடையப்படுவது நிர்விசேஷப் பிரம்மமானுல், அது ஸுகரூபமாக ஆகமாட்டாதே! ஆகவே உபநிஷத்து வாக்கியங்கள் கேவலம் எட்டுச் சுரக்காய்தானே ஆகின்றன!

ராகன்.—சபாஷ்! இந்த ஞானம் ஜீவனுக்கு உதிக்குமாயின், விஷ்ணுபக்தி இருந்த இடம் தெரியாமல் ஓட்டம் பிடிக்கவேண்டியதுதான்! எந்த ஸ்திரீகளது மோகத்தினின்றும் ஜீவனை விடுவிக்க வேண்டுமென்று விவேகன் முயற்சிக்கிருனே, அந்த ஸ்திரீகளின் குணங்களாலேயே இதே விவேகனே கட்டுப்படுகையில், விரக்தி உலகில் எப்படி உண்டாகக்கூடும் நாம் காம வலையைத் தீவிரமாய் வீசி வருவோமாகில்? பேரானந்த அனுபவங்களுக்குக் காரணமான அங்க அவயவங்களையுடைய ஸ்திரீகளை மாம்ஸ பிண்டங்களென்று வைதிகப் பிசாசுகள் மூடர்களை வஞ்சித்து வருகிருர்களே! ஆயினும் அந்த யுவதிகளின் நடை யென்னுங் கதியைக் கண்ட க்ஷணத்திலேயே, இவர்கள் ஸமாதியின்கதி அதோகதியடைந்து விடுகிறதல்லவா! (உற்றுக்கேட்டு) இல்லையா? அந்தோ! குருடனுக்குப் பாலின் நிறத்தை எப்படிக் காட்டுவது?

துவேஷ.—விவேகனை வெல்வோமாகில் இந்த வைதீகப்பேய்களனைத்தையும் வென்றவராவோம்! நானே அக்காரியத்தை முடிக்க வல்லவன்.—ஹ! ஹ! ஹ! (உரக்கச் சிரித்து) எந்த உபநிஷத்தில் விழுந்து புரண்டபோதிலும், அழுக்கடைவதைத் தவிர்த்து விவேகனுல் பிரம்

மத்தைக் கண்டு விடமுடியுமோ நானிருக்கும் வரை?

(திரைக்குள்: "யார் அப்படிக் கூறுவது? அப்படிக் கூறுவது யாரடா?")

ராகன்.—(பயத்துடனும், பரபரப்புடனும்.) ஐயையோ! நாம் எவ்வளவோ சிரமப்பட்டும், விரக்தியும் விஷ்ணுபக்தியும் நம் வலைகளைக்கடந்து அதோவரும் விவேகனையும் ஸுமதியையும் அணுகுகிறார்களே! நம் மகாராஜனின் உத்திரவை எப்படி நிறைவேற்றுவிக்கப் போகிறோம்? நம் அதிர்ஷ்டம் மாறி விட்டதுபோல் காண்கிறதே— இச்சமயம் நாம் தனித்து இவர்களிடம் அகப்பட்டு கொள்ளக்கூடாது! நம் தோழர்களான காம க்ரோதாதியோரைக் கலந்து யோசித்தே தகுந்த வழி செய்ய வேண்டும்.

(ஓடிவிடுகிறார்கள்.)



## ஆறுங் காட்சி.

இடம்:—ஸபா மண்டபம்.

---

[விவேகனும் ஸுமதியும் பிரவேசம்.]

விவேக.—பெண்ணே! இன்னுமுமேன் உனக்குப் பயம்? எதிரி எவின சோரர்களிடமிருந்து தப்பி, விரக்தியும் விஷ்ணுபக்தியும் உன்னைத் திரும்பவும் அடைந்து விட்டார்களே!

ஸுமதி.—(பெருமூச்செறிந்து)—. ஆயினும், எப்பொழுதும் மறைவிலேயே இருக்கும் ராகனும் த்வேஷனும் எச்சம

யம் என்ன தீங்கு செய்வார்களோ என்றே என் மனம் சலிக்கிறது.

விவேக.—பேதாய்! அக்கவலை நீ கொள்ளத்தக்கதல்ல. கீதோபதேசம் செய்த பகவான், முடிவில் கூறியதை மறந்தனையோ? தன்னையே சரணமடைந்தோரைக் காப்பாற்றுவது அவன் பொறுப்பே யல்லவா? அப்படிச் சரணமடைந்த பிறகு ஜீவனுக்குப் பயம் ஏது?

ஸுமதி.—(துக்கத்துடன்) எனினும், சுகதுக்காதிகளில் மாறி மாறிச் சுழன்று வருந்தும் ஜீவாத்மாவின் கஷ்டங்களைக் கண்டு ஸகிக்க என்னால் ஆகவில்லையே!

விவேக.—(அனுதாபத்துடன்)—. இனிவருந்துத லொழி! ஜீவனுடைய புண்ய விசேஷத்தால் அவனது புத்தி பரப்ரம்மத்தி னிடத்தில் அவனுக்கு அளவில்லாத ஆசையை உண்டாக்குகிறது. சிற்சில ஸமயம், புத்தி, மோகத்தால் சலித்தபோதிலும், திரும்பவும் ஜீவனது சக்திக்கேற்றுப்போல், பக்தியிலோ பிரபத்தியிலோ வந்து நிலைநிறுத்தப்படுகிறது. இந்தச் சக்தி உண்டானதும், ஸ்வர்க்க சுகத்தைக்கூட நரகவேதனையாய் நினைத்துப் பரமாத்மாவின் பாதாரவிந்தங்களிலேயே ஸ்திரப்பட்டு நிலைத்துவிடுகிறான். அப்பொழுதே அவனுக்கு மோக்ஷம் ஸித்தம் அத்தகைய உபாஸனை ஏற்படுங்காலத்திலேயே புருஷன் மகானந்த ஸ்வரூபமான ப்ரம்மானுபவத்தில் ஆசை யுடையவனுகிப் பேரானந்தத்தைப் பெறுகிறான்!

ஸுமதி.—நாதா! சந்திரனைப் பிடிக்கக் கைநீட்டும் குழந்தைபோல, ப்ரம்மாதி யோகிகளும் சப்தாதி விஷயங்களில் மயங்கும்போது, சாதாரண ஜீவனுக்கு மோக்ஷம் எப்படிக்கிடைக்கக் கூடுமென்கிற சந்தேகம் என்னை விட்டபாடில்லைதான்.

விவேக.—பேதாய்! திடத்துடன் மரத்திலேறிய சாமர்த்திய சாலிக்குப் கிடைக்காத கனிகள், அசிரத்தையுடன் போய்க்கொண்டிருக்கும் வழிப்போக்கனுக்கு, அவனது புண்ய விசேஷத்தால் கிடைப்பது சந்தேகமற்ற அனுபவமல்லவா?

ஸுமதி.—வாஸ்தவமே! என் சந்தேகம் தீர்ந்தது. ஆனாலும், தங்களால் கைகொடுக்கப் பட்ட ஜீவன், ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டத் தக்கவனானால், இடையிடையே ஏன் பயத்தினால் பீடிக்கப்பட்டவனாகிறான்?

விவேக.—என்ன மயக்கம்! மோக்ஷத்தை அடையப்போகிறவனையும் மோக்ஷத்தை அடைந்தவனாகவே பாவித்துப் பேசுகிறாயே? மனஸ் அஜாக்ரதையாயிருந்தால் பயம் உண்டாவது சகஜந்தானே! வர்ணம், ஆச்ரமம், இடம், காலம் இவைகளுக்கு ஏற்ற சாஸ்திர நியமனப்படி நடந்தால் எவ்வித பயமும் உண்டாவதற்குக் காரணமேயில்லை.

ஸுமதி.—பயத்திற்கு ஹேது இதுவானால், த்யானம் எவ்விதம் பூர்த்தி அடையக்கூடியது?

விவேக.—எவனொருவன் மனத்தை வேறொன்றிலும் செலுத்தாமல், பகவத் கிருபை யொன்றையே ஆதாரமாக வைத்துக் கொள்கிறானோ அவன் த்யானம் தடங்கலின்றி பூர்த்தி அடைவது நிச்சயம்.

ஸுமதி.—சரிதான்.—மஹா புருஷர்களுக்குங்கூட ஏன் மோக்ஷம் சீக்கிரத்தில் கிடைக்கிறதில்லை?

விவேக.—மஹாஸூக்ஷ்மமான விஷயமாகும் இது! பாகவதாபசாரம் சகல புண்யங்களையும் போக்கடிக்க வல்லது.

பாதகங்களிலும் கொடியது செய்த நன்றியை மறப்பது. அதனினும் கொடியது செய்யப்படுகிற நன்றியை மறப்பது. அதனினும் கொடியதானது செய்யப்போகிற நன்றியை மறப்பது! ஆகவே சிறிது அஜாக்ரதையும் பெரிய அபசாரத்தை உண்டாக்குகிற தல்லவா?

ஸுமதி.—நாதா! பாகவதாபசாரக் கொடுமையை அறிந்தேன். அதற்குப் பரிகாரம் கிடையாதா?

விவேக.—திரும்பவும் அதே பாகவதர்களைச் சரணமடைந்து அவர்களது அநுக்ரஹத்தைப் பெறுவதே அதற்கேற்ற பரிஹாரமாகும். நீரின்றித் தவிக்கும் மீன், மறுபடியும் நீராலேயே பிழைத்து ஸந்தோஷமடைவது போலத்தான் இதுவும்! இம்மாதிரி யோகத்திற்கு, விக்னங்கள் ஸம்பவித்த பிறகு அவைகளை நிவர்த்தித்துக்கொள்ள வழிதேடுவதைவிட, அவைகளை நெருங்க விடாமல் ஆரம்பத்திலேயே தடுத்துக் கொள்வதே மோக்ஷமடையச் சிறந்த மார்க்கமாகும்.

[ஓர் தூதன் பிரவேசம்.]

தூதன்.—பிரபோ! ராஜாதிராஜ, ராஜ மார்த்தாண்ட, ராஜ காம்பீர்ய, ஸார்வபௌம திவ்யரத்ன ஸிம்ஹாஸனாரூட மகாமோக மகாராஜனின் தூதன், ஸம்வ்ருதி ஸத்யன் நமஸ்கரிக்கிறேன். (அஞ்சலிஹஸ்தனாய், ஓர் பனைஓலையைக்காட்டி.) எங்கள் சக்ரவர்த்தியார் உத்திரவு இதோ.

விவேக.—(அலக்ஷியத்துடன்)—. நீயே படி—.

தூதன்.—உத்திரவு—. (படிக்கிறான்)—. எங்கள் மகாமோக மகாராஜாவின் உத்திர வென்ன வென்றால்,—

விவேக.—(வெளிக்கிளம்பிய சிரிப்பை அடக்கிக்கொண்டு). பிரியே! மோகராஜன் நமக்கு உத்திரவு இடுகிறானும்! பேஷ்! எதிரியின் அபிப்ராயத்தை முற்றிலும் கேட்டறிவோம்!—. மேலே படி—.

தூதன்.—(படிக்கிறான்) "ஜீவாத்மாவிற்குப் பரப்பிரம்மத்தினிடம் ச்ரத்தையை உண்டாக்கி விட்டாய். அந்தச் ச்ரத்தை ஐஸ்வர்யாபேக்ஷைக்காக மட்டிலும் நிற்குமாக. அப்படியாயின் நாமும் உன்னை மன்னிப்போம்."

விவேக.—(அலக்ஷியச் சிரிப்புடன்)—பேஷ்! பிரம்மசாரிக்கு நிற்க இடங்கொடுத்தனியாயந்தானிது!—உம்—மேலே?

தூதன்.—"மீறி நடப்பாயாகில், நமது சம்ஞ்ஞாமாத்திரத்திலேயே ஏவப்படும் க்ரோதன் முதலிய ஸேனுபதிகள் உன்னைத் த்வம்ஸம் செய்து விடுவார்கள், ஜாக்ரதை."

விவேக.—சபாஷ்! இவ்வளவுதானு? இன்னமும் உண்டோ உத்திரவு?

தூதன்.—காமக்ரோதாதி ஸேனுபதிகளின் திவ்யப்ரபாவம் எடுத்துக் காட்டப் பட்டிருக்கிறது:

விவேக.—எங்கே, படி?

தூதன்.—"காமனுடைய ஒப்பிலா சௌர்யத்தை வெல்லவனுலாகும்? கோபத்தணலாலுண்டாகிய ருத்ரனது மூன்றுவது கண்ணும் மதனனது சிருங்காரத்தினுல் மயக்கமடைந்து சீதளமாகி விடவில்லையா? ஆதி பகவானும் ராகத்வேஷாதிகளுக்கு ஆட்பட்டவனுகியேயன்றே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்னும் லீலைகளைப் புரிந்து வருகிறுன்! ஆசைக்கு ஆளாகாதவர்களும் அவனியில் உண்டோ?"

ஸுமதி.—காமத்தின் கொடுமை கணக்கிடக்கூடாததுதான்!

விவேக.—இந்த உளறல்களையா லக்ஷியம் செய்வது?—. தூதா! மீதி உளறல்கள் ஏதேனு முண்டோ?

தூதன்.—"க்ரோதன் மகிமையைக்கேள். கோபத்தை விலக்கும் பொருட்டுக் குரோதத்தைக் கோபிப்பது, கோபத்தை ஒழிப்பதாகுமா? கோபத்தை ஜெயிக்க எண்ணும் பொழுதே க்ரோதம் ஏற்படுகிறதல்லவா?

ஸுமதி.—ஐயையோ! காமனை விடக் க்ரோதன் வெல்வதற் கரிதானவனு!

விவேக.—இந்தப் பிதற்றல்களுக்குக் காது கொடாதே!—. உசிதமான கால இடங்களில் கோபம் உண்டாக வேண்டியது கொண்டாடத்தக்கதே யொழிய குற்றமாகாது — ஹே தூத! அநங்கனுக்கப்பட்ட காமனையும், யாவரும் பரிஹஸித்துவரும் க்ரோதனையுமே நம்பிக்கிடக்கும் பேடியாம் மகாமோகனை நான் அழிக்கவே போகிறேன் என்பதை என் உத்திரவாக உனது அரசனிடம் தெரிவி, போ—.

தூதன்.—சரி—. (கொஞ்சதூரம் சென்று திரும்பி) பிரபோ! எங்கள் மகாராஜனும் தாங்களும் ஒரேகுலம். ஒரு குலத்தைக் காப்பாற்றுவதற்காக, ஒருவனைப் பலி கொடுக்கலாம் என்ற ந்யாயத்தை மறக்கக்கூடாது. போய் வருகிறேன்.

(போகிறான்.)

ஸுமதி.—நாதா! முக்தியுபாயாரம்பஞ் செய்ய யிருக்கும் ஜீவாத்மா, மோகனால் ஏவப்பட்ட காமக்ரோத லோபமத மாச்சர்யங்களால் பீடிக்கப்படுவானாகில், உமது பிரதிஞ்ஞை எப்படிக் கைகூடும்?

விவேக.—ஏன் சந்தேகம்?—. தெளிந்த புத்தியுடைய திடஞ்ஞானிகளை இம்மயக்கங்களால் சற்றும் சலிக்கச் செய்ய முடியாது. அவன் திடத்தைக் கண்டதும் இவையாவும் தாமே பறந்து விடும்! ஸூர்யாஸ் தமனகாலம் நெருங்கி ஸந்தியா காலம் கிட்டி விட்டது! வர இருக்கும் இருட்டே மோகனுக்கும் காமனுக்கும் வஸதியான காலம். அதைத்தடுக்க நானும் ஸந்த்யா னுடஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஜீவாத்மாவின் பக்தியை ஸ்திரப்படுத்தச் செல்கிறேன். நீயும் க்ஷமை சாந்தி முதலியவர்களுடன் வேண்டிய மங்களாசாரங்களைக் கைக்கொண்டு, அஞ்ஞானந்தகாரத்தை விலக்கி, ஞான விளக்கை ஏற்றி என் வரவை எதிர்பார்த்திருப்பாயாக.

ஸுமதி.—பாக்யம்.

(இருவரும் செல்கிறார்கள்.)

---

# அங்கம் II.

---

## முதற் காட்சி.

இடம் :—நந்தவனம்.

---

[காமனும் வஸந்தனும் பிரவேசம்.]

காமன்—வஸந்தா! என்னே என் மகிமையும் என் பாணங்களின் பெருமையும்! மதுரமான கரும்பை வில்லாகவும், சுகந்தமான புஷ்பங்களை பாணங்களாகவும், ரீங்காரஞ் செய்யும் வண்டுகளை நாணுகவும், அபலைகளாகிற சுந்தர யுவதிகளை சைன்யமாகவும் கொண்ட நான் சூலாயுத பாணியையே வெல்லவில்லையா?

வஸந்.—உன் வீரம் அஸாதாரணமானது. அறிவாளிகள் ஒரோர் பயன்களை விரும்பி நன்மையோ தீமையோ செய்து அரும்பெருமையுள்ள உம்மிடத்தில் "காமன் செய்தான், கோபம் செய்தான்" என்று த்யாகம் செய்கிறார்கள்.

காமன்—நன்றாய்க் கூறினை! உன்னோடு கூடிய என்னாலேயே நமது மோகனுக்கு இனி வெற்றி நிலைக்கப்போகிறது!

வஸந்.—ஸமாதி செய்வதில் பிரயத்தனிக்கும் புருஷன் மனத்தைக் கலைக்க வேண்டிய ச்ருங்கார ரஸங்களை விருத்தி செய்யவேண்டிய காரியத்தை நான் செய்து முடிக்கிறேன்! அதற்கு ஆதாரமான ஆலம்பந விபாவங்களாகிற

ஸ்திரீகள் முதலியோரது சேஷ்டாதிகள் உன்னால் உண்டாக்கப் படட்டும்!

காமன்.—அதுவே ஸரி!—. ஹ! ஹ! பரப்ரம்மமா எது? பரப்ரம்மமா சுந்தரயுவதிகளை பரப்ரம்மம் என்பதற்குமா சந்தேகம்? ஸ்ருஷ்டிக்குக் காரணமா யிருக்கிறதல்லவா பரப்ரம்மம்! ஆனந்தத்தைக் கொடுப்பதல்லவா பரப்ரம்மம்?—. ஸ்திரீகளேதான் ஸ்ருஷ்டிக்குக் காரணமாகுபவர்கள்! அவர்களே ஆனந்தத்தைக் கொடுக்க வல்லவர்கள்! ஆகவே ஸ்திரீகளே பரப்ரம்மமென்பதிலுமா சந்தேகம்?

வஸந்.—உபநிஷத்துக்களும் ஆமோதிக்கக்கூடிய வாக்யமே நீ கூறியது! யோகியின் புத்தியும் ஸ்திரீகளைக் கண்டமாத்திரத்தில் கலங்கியே விடுகிறது! ஸ்திரீகளாகிற நம் ஸேனை உயிரோடிருக்கும் பொழுது இந்திரியஜயம் செய்யவேண்டு மென்கிற ஆசையுடையவனும் உயிர்த்திருப்பானா? புருஷனது த்யானம் அபாயகரமான ஸந்தேஹ ஸ்திதியிலேயே இருக்கிறது இப்பொழுது! ஸம்ஸார கஷ்டங்களை வெறுக்கிறான்! ஸம்ஸார சுகங்களை விரும்புகிறான்! அதை விரும்புவதற்காக வெட்கப்படுகிறான்! வெட்கப்பட்டும், அதையே திரும்பவும் விரும்புகிறான்! ஆகவே, இதுவே நம் ஸைன்யத்தைக்கொண்டு அவனை ஜயிக்க வேண்டிய தருணம்!

காமன்.—நன்றாயுரைத்தனை! எவ்விதத்திலும் அவ்விவேகன் அவிவேகனே! என் ஸைன்யங்களின் ப்ரபாவத்தை அறிந்தவனில்லை! ஹ! ஹ!—. இருபக்கங்களிலும் சுருக்கையுடைய கயிற்றை யல்லவா கொண்டிருக்கிறான். ஜீவாத்மா என்னிடம் கோபங் கொள்வானாகில், அக்கோபத்தி

ஞலேயே அவன் ஜயிக்கப்பட்டவனாகிறான்! கோபங் கொள்ளாமல் இருப்பானாகில், என்னை எப்படி விலக்க முடியும் அவனால்?

[பயங்கர ரூபத்துடன் க்ரோதன் (கோபன்) பிரவேசம்.]

க்ரோத.—(விரைவுடன் வந்து) மன்மத ராஜனே! விவேகனுடன் சேர்ந்து காமக்ரோதாதிகளை வெல்வதாகக் கூறும் வீணன் யாவன்? (ஆர்ப்பரித்து) ஹ! ஹ!! ஹ!!! நானிருக்கையிலுமா விவேகனைப் பற்றிய பிரஸ்தாபம்?

காமன்.—உன்வரவு நல்வரவாகுக! மஹாமோஹ மஹாராஜனுக்கு ஜே!

வஸந்.—ஜே!... நெருப்புப் பிடித்ததும் காற்றடிக்க ஆரம்பித்ததுபோலக் காமனும் க்ரோதனும் சேர்ந்த பிறகு ஜீவன் முக்தியடைவதேது? இனித் தைர்யமாய் நம் காரியத்தைச் செய்ய ஆரம்பிப்போம்—.

காமன்.—எனக்கு ஸஹாயங்கள் வெகு அநுகூலமாகவே இச்சமயம்! சேர்ந்திருக்கின்றன சந்திரன் எனக்குப் பிரியனான ஸ்நேஹிதன்! நிலா எனக்கு இஷ்டையான தோழி! ச்ருங்கார ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய வஸந்தன் ஆத்மபந்து! மஹாவேகத்தையும் பலத்தையுமுடைய க்ரோதன் ஆபத்பந்து!—. இத்தகைய ஸஹாயங்கொண்ட புஷ்பபாணனை உயிருடன் எதிர்த்து நிற்க வல்லவனுமுளனோ?

க்ரோத—இல்லவேயில்லை—. இருந்தால் முன் வரட்டும்!

காமன்.—ஸமாதியை விரும்பும் ஜீவனைப் பிடிப்போம் வாருங்கள்!

(ஆர்ப்பரிக்கின்றனர்.)

வஸங்.—அதோ பாருங்கள் விவேகனுல் பிடிக்கப்பட்ட ஜீவன் ஊசலாடுவதை! பயத்திற்குக் காரணமான கிரந்தங்களைக் கவலையுடன் பரிசிலனை செய்து கொண்டிருக்கிருன்! தேகபோஷணத்தையும் கைவிட மனமில்லை! துக்கஸாகரத்தை நிவ்ருத்தித்துக்கொள்ள ஆசைப்படுகிருன்—. ஸம்ஸார ஸுகங்களை அகற்றவும் இஷ்டமில்லை! இப்படி ஊசலாடும் இந்த ஜீவனை இப்பொழுதே நம் வசமாக்கிக் கொண்டால்தான்! ஜயித்தோமாவோம்.

காமன்.—மமகாராதிகளான பழைய வாஸனை, கயிறு போலிருந்து, நம்பக்கலிலேயே ஜீவனை இழுத்துவிடும் ஸந்தேஹ மின்றி!

வஸங்.—அப்படி நம்பி அஜாக்ரதையா யிருக்கக்கூடாது! இக்கணமே க்ரோதன் ஜீவனைப் பிடித்துக்கொள்ள வேண்டும்—. அதோ! அதோ! ஸதா பகவந்நாம ஸ்மரணத்துடனும், குருனுபவத்துடனும், அவனையே ஆராதித்துக் கொண்டும், விவேகனது கோட்டைக்குள் புகுந்து விட்டான்! இனி ஜீவனை மீட்டுவர நம்மால் முடியாது!

காமன்.—(வெட்கத்துடன் சிரித்து.) வஸந்தா! என்ன வார்த்தை கூறினுய்?...ஸாமர்த்திய மில்லாதவனைப் போல், இந்த ஸமயத்திலா பயமடைகிருய்? அச்வத்தாமா முதலியோர் முன்காலத்தில் செய்து காட்டிய வழி அடைக்கப்படவில்லையே? நாமும் எதிரிகள் தூங்கும் பொழுதே அவர்களை வதம் செய்து வருவோம் காண்!

வஸங்.—அதுவும் முடியாத காரியமே இனி!—. அதோ! ஜீவாத்மா பரமாத்வைச் சரணமாக அடைந்துவிட்டா

னே! வீடு கொள்ளைபோன பிறகு விழித்துக்கொண்ட காவல்காரர்கள் போலாகி விட்டோம் நாம் இப்பொழுது!

க்ரோ.—(பரபரப்புடன்.) ஹ! ஹ!! ஹ!!! பயப்படாதீர்கள்! எனக்கு எங்கும் செல்வாக்குண்டு! மஹாபுருஷர்களும், அவர்களுடைய கந்தைத்துணி, கமண்டலு, தர்ப்பாஸனம் ஆகிய சிறிய வஸ்துக்களை அவர்கள் அறியாது மறைத்துவிடுவேனாகில், அவர்கள் ஒருவர்க்கொருவர் கோபமும் மனஸ்தாபமும் கொண்டவராகி, பொய் சொல்லுதலும், தோஷாரோபணம் செய்வித்தலும், கோட் சொல்லிக்கொள்ளுதலுமாகிய சகல தோஷங்களும் உடையவராய், தியானத்தை இருந்த விடந்தெரியாது மறந்து போகும்படிச்செய்து விடுவேன் அவர்களிட மிருந்து!

காமன்.—வாஸ்தவமே!

வஸந்.—காமனையும் க்ரோதனையும் வெல்வ தரிதுதான்—. யாரது வருவது?...சபாஷ்! தர்மத்வம்ஸி லோபன், த்ருஷ்ணை பத்னீ ஸமேதராக எழுந்தருளுகிறார் நமது உதவிக்காக! கவனிப்போம்!

[லோபனும் (பேராசையும்), திருஷ்ணையும் (துராசையும்), ஓர் புறமாய்ப்பேசிய வண்ணம் பிரவேசம்.]

லோப.—என்னைத்திருப்தி செய்ய வல்லவரும் உண்டோ?—. திருப்தி என்றால் என்ன?—. த்ருஷ்ணே! நீயே எனக்கேற்ற ஸஹதர்மிணி! உன் அழகே அழகு! ஸ்திரீகளுக்கு இடை சிறியதா யிருப்பதே அழகாமே! உன் வயிற்

யில் பிரபஞ்சத்திலுள்ள பொன் வெள்ளி ரத்ன மயங்களனைவற்றையும் மலைமலையாகக் கொட்டி நிரப்பினலும், உன் இடைமட்டும் மேன்மேலும் இளைத்ததாகவே காட்டுகின்றதே!

கிருஷ்.—நான் அழகிற் சிறந்தவளாயிருப்பது ஓர் ஆச்சர்யமா? அதற்கேற்றதாக மூவுலகிலுள்ளவர்களது பொன் ரத்னம் எல்லாவற்றையுங் கொண்டுவந்து எனக்குச் சகலவித ஆபரணங்களும் செய்து கொடுக்கவல்ல சாமர்த்தியம் உங்களிடமிருந்தாலல்லவா என் அழகு சோபிக்கும்!

லோப.—அதுதான பிரமாதம்!—என்னல் ஆக்ரமிக்கப் பட்டவர்களும் என்னல் வெல்லப் படாதவர்களாவரோ? உமியையும் மேருவாக எண்ணிச் சண்டையிட்டுச் சாகிறார்களே! குபேரனை நான் படுத்தும் பாட்டைக்கேள்! இருக்கும் தனத்தை எவர்க்கும் கொடுப்பது மில்லை. தானும் திருப்தியாக அனுபவிப்பது மில்லை. மேன்மேலும் தனத்திலேயே ஆசைகொண்டு, இருக்கும் தனத்தைக் காக்கவேண்டிய கவலையால் நித்ராஸுகத்தையும் இழந்தவனு யிருக்கிறுன் அக்குபேரன்!—. மகாமோகனுஞ்ஞைப்படி விவேகனை வெல்வதற்காகக் காத்திருக்கும் காமக்ரோதர்களே, ஜீவன் சாந்தியடையுமுன் கண்டு, நம் வெற்றிக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

(காமக்ரோதர் முன்வர, நமஸ்கரித்து)

தமையன்மார்களே!—அபிவாதயே—. ஸர்வ ருஷி—ப்ரவராந்வித ஸர்வகோத்ரஃ, ஸர்வஸூத்ரஃ ஸர்வவேதாத்யாயீ—லோப சர்மாநாமாஹம் அஸ்மிபோஃ

காம - க்ரோ.—தீர்க்காயுஷ்மான்பவ லோபசர்மா !

திருஷ்.—நாட்டுப்பெண் திருஷ்ணை இதோ நமஸ்கரிக்கிறேன் !

காம - க்ரோ.—தீர்க்க ஸுமங்கலீபவ !

(யாவரும் ஒருவர்க்கொருவர் ஆலிங்கனஞ் செய்து கொள்கிறார்கள்.)

வஸந்.—மஹா ஆநந்தகரமான சேர்க்கை! பற்றி யெரியும் கோடையில், குடிக்கத்தண்ணீரில்லாத இடத்தில், நெருப்புப் பிடிந்துக்கொள்ளக் காற்றும் சேர்ந்தாப்போல நாம் சேர்ந்த பிறகுமா விவேகன் தலைநிமிர்த்தக்கூடும் ?

காமன் —புறப்படுவோம் அணிவகுத்து ஜீவாத்மாவை வெல்ல!—. முதலில் நான் போகிறேன் நீங்கள் மூவரும் திருஷ்ணையை நடுவில் நிறுத்தி எனக்குப் பின்பலமாகவும் பக்க பலமாகவும் வாருங்கள்—.

(அப்படியே வ்யூஹம் வகுத்து ஐந்தாறு அடி நடக்கிறார்கள்.)

காமன்.—(இரண்டு மூன்று பாணங்களை அதிவேகமாகத் தொடுக்கிறான்.)

வஸந்.—ஜாக்ரதை ! ஜாக்ரதை ! விவேகன் ஏதோ ரகச்யமானதோர் மந்திரோபதேசம் செய்கிறான் ஜீவாத்மாவுக்கு !

க்ரோ.—விவேகன் என்ன செய்யக்கூடும் நம்மை ? ஜீவன் இன்னமும் காமன் கணைகளைக் கடக்கவல்லவனாகவில்லை அறிவாய்.

வஸந்.—நண்பர்களே ! சத்ரு மிகவும் பலவான் ! வீண் வீரவாதங்கள் அவனெதிரில் கூறவேண்டாம் !

லோபன்—திருஷ்ணே ! நீ யேன் பயப்படுகிறாய் ? மகா வீரர்களின் வ்யூகமத்தியிலிருக்கும் நீ பயப்படாதே!

வஸங்.—வேண்டாம் !—. ஜாக்ரதை! உங்கள் மூவருள் யாராவது ஒருவர் இறக்க நேரிடினும், மகாமோக ராஜனும் துர்மதி ராணியும் உயிர் துறப்பது நிச்சயம் !

லோபன்—அரசனில்லாமல் நாம் மட்டும் யுத்தஞ் செய்வது முறையல்லதான். நாம் செய்ய வேண்டியதை அரசனே யோஜித்துச் சொல்லட்டும் !

க்ரோ.—சீ ! சீ ! இத்தனை காலமாக எதையும் செய்து முடிக்காமலா நாம் திரும்புவது ?

லோப.—வெள்ளம் வருமுன் அணை கோலிவைப்பதே முறை! உயிரைக் காத்துக்கொண்டாலல்லவோ ஜயத்தைப் பற்றி யோசிக்க அவகாசமேற்படும்!

காமன்.—லோபன் கூறுவதே நியாயம்! தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் நிமித்தம் தன் தேசத்தையும் விட்டோட வேண்டுமென்பதே சாஸ்திரம்! மஹாராஜன், டம்பனையும் கர்வனையும் அவர்கள் மனைவிமார்களையும் முன்னிட்டுக்கொண்டு சத்ருவை வெல்ல யத்தனிப்பார். விரோதிகளைத் தாங்குகையில் கொல்ல முயலும் நாம், நம்மைத் தீவிரத்மாய் நோக்கி வரும் விவேகனாகிய பெரும் பாதாளத்துள், இப்பொழுதே அகப்பட்டு நாசமடைவது கூடாது. இதோ ஓடுகிறேன்! யாரால் என்னைப் பிடிக்க முடியும், வாருங்கள்.

(யாவரும் ஓடுகின்றனர்.)

---

## இரண்டாங் காட்சி.

இடம் :—கங்கையும் யமுனையும் சங்கமமாகு மிடம் :
டம்பன் ஆச்ரமத்திற் கெதிரில்.

---

[டம்பனும், வஞ்சனை (குஹனை) யும் பிரவேசம்.]

டம்பன்—ஹ! ஹ! ஹ! ஹ!—. அடியே! உன்னைத்தான்: ப்ருஹஸ்பதிக்குத் தாரைபோல பரபுருஷ ஸ்பர்ச மறியாத எனது இன்னுயிர்க் காதலியாகத் தர்மானுஷ்டானம் செய்து வருகிறு யல்லவா நீ?

வஞ்ச.—நல்ல உதாரணம்! வெட்கமாயிருக்கிறது எனக்கே!—வஸிஷ்டருக்கு அருந்ததிபோல என்று சொல்லக் கூடாதோ என்னை?—. பாருங்கள்,—எவ்வளவு சோரர்கள், எவ்வளவு சூதாடிபவர்கள், எவ்வளவு கிராமாதிகாரிகள், எவ்வளவு மந்திரி ச்ரேஷ்டர்கள், எவ்வளவு பாஷண்டர்கள் என்னைச் சதா பிரார்த்தித்துக்கொண்டே காத்திருக்கின்றனர் பாருங்கள்! என்னைப் பிரார்த்திக்கும் அவ்வளவு பெயர்களையும் அவர்கள் பிரார்த்திக்கும் பொழுதெல்லாம் அவரவர்களை உங்களைப்போலவே பாவித்தல்லவா சேருகிறேன்!

டம்பன்—(மனத்துள் சிரித்துக்கொண்டு)—. நீயே நித்ய பதிவிரதை! இதோ பார்—. என்னுடைய கார்ஹபத்யாக்னி அணைந்துபோனால், எந்த நெருப்பையாவது கொண்டுவந்து போட்டு எனது அக்னிஹோத்ரங் குறைவுறாது செய்கிற யஞ்ஞ பத்னி நீயே! தீண்டாக் காலம் கிட்டியபோதிலும் வெளியிட்டுக் கொள்ளாது.

சர்வதா என்னுடனேயே யிருந்துகொண்டு என்னுடைய தர்ச பூர்ணமாஸ இஷ்டிகளையும், பிண்டதான ச்ராத்தம் முதலிய கர்மாக்களையும் குறைவறச் செய்வித்து, ப்ராயச் சித்தாதி உபத்ரவங்களுக்கு என்னை ஆளாக்காது, என் பிராம்மண்யத்தை நிலைநிறுத்துகின்றனை! ஹ! ஹ! உன் சாமர்த்தியம் வேறு யாருக்கு வரும்!

வஞ்சனை—நாராயண! நாராயண! என்ன வார்த்தை நீங்கள் சொல்வது? நம் க்ருஹத்தில் எழுருவது அக்னி அணைந்ததுண்டோ? ருதுதோஷமும், தெய்வாதீனத்தால், பர்வ ச்ராத்தாதி காலங்களில் நேராது ஏற்படுகிறது! அதற் கென்ன பிரமாதம்!

டம்பன்—அதைத்தான் நானும் சொல்கிறேன்—. தப்பென்ன? ஆகவேதான் உன்னை ச்லாகித்துப் போற்றுகிறேன்! ஏகாதசியில் பட்டினியிருப்பதுபோல் பாவித்து வரும் எனக்குப் பூர்ணமாகப் போஜனம் பண்ணி வைத்தும், அதை மறைத்து, துவாதசியன்று விடியுமுன்னமே பரபரப்புடன் பாரணைக்குப் பதார்த்தங்கள் அக்கம் பக்கத்தில் ஸம்பாதிக்கப் போகிறாயே! அதனால் என் ஏகாதசி விரதமும் உலகோர்க்குப் பிரசுரிக்கப்படுவதுடன், உண்மையான துவாதசிப் பலனுமல்லவா எனக்கு லபிக்கச்செய்கிறாய்!—உன்னை ஸஹதர்மிணியாயடைந்த என் பாக்யமே பாக்யம்! ஒரு ரகஸ்யம் ஞாபகத்திலிருக்கட்டும்! என்னைவிட்டு உன்னை எடுத்துச்செல்ல பலர் சதியாலோசனை செய்து வருகிறார்கள். ஜாக்ரதையாயிருக்கவேண்டும் நீ...இதோ பார்!—. ஸபதிகளாம் நம்மை, விவேகனைக் கொல்ல வேண்டிய அபிசார யாகத்தை நிறைவேற்றிக் கொடுக்கும்படி மகாமோக ராஜன் தர்ம பத்னி துர்மதிதேவி என்னை வேண்டிக்

கொண்டிருக்கிறார்கள். நமது ச்லாக்யமான பிராம்மண்யமும் இதிலிருந்தே பிரகாசிக்கிறதல்லவா! அவர்கள் தாக்ஷிண்யத்தை மீறாமல் ஒத்துக்கொண்டுவிட்டேன். இன்னதென்று தெரியாததோர் தேவதையை நான் ஆராதிக்க வேண்டும். அதற்காக ஆகாச கங்கையில் அனுஷ்டானம் முடித்துப் புளினத்திலிருக்கும் தேவ குருவான பிருஹஸ்பதியால் சேகரிக்கப்பட்ட கற்பக மலர்களையும், கனிகளையும் சீக்கிரத்திலேயே கொணர்வாயாக!

வஞ்ச.—விவேகனை அபிசாரஞ் செய்து கொல்ல முடியுமோ? அவனைக் கொல்லாவிட்டால் அந்தத் தேவதை அபிசாரம் செய்தவன்மீதே திரும்புமல்லவா?

டம்பன்—அடி அசடே! என்னுடைய மஹிமையை நீ இன்னமும் அறியவில்லையா? 18-வித்யைகளும் 64-கலைகளும் எளிதில் அறிந்த என் சாமர்த்யத்தால், இம்மாதிரி ஆயிரக்கணக்கான யாகங்கள் செய்து முடிக்கப்பட்டிருக்கின்றனவல்லவா! என் வைராக்யம் சாமான்யப் பட்டதா? பூமண்டலம் முழுவதையும் ஜயித்த பரசுராமன் அம்மண்டலத்தைப் பெற்றுக்கொள்ளும்படி என்னை மன்றாடியும் மறுத்துவிட்டேன்! அதைக்கண்டு ஆச்சர்யப்பட்ட தேவாதிதேவர்கள், ஸ்வர்க்கத்தையும், மோக்ஷத்தையும் வருந்தி வருந்தி வேண்டிக் கொடுக்கவந்தும், அவற்றையும் வேண்டாமென்று திரஸ்கரித்து விட்டேனே! சாந்தியே எனது ஐச்வர்யம்! ஓம் சாந்திః சாந்திః சாந்திః.

வஞ்ச.—வாஸ்தவந்தான்: அந்த யாகம் ச்யேன யாகமா? தங்கள் தர்மபத்னியாகிய எனக்கும் காரியம் அந்த யாகத்தில் உண்டல்லவா?

டம்பன்—பைத்யமே!—. இதோ பார்: பரம ரஹஸ்ய மொன்று கூறுகிறேன். உன் பரமாப்தைகளான கிருஷ்ணை முதலியோருக்குக்கூட தெரியக்கூடாது இது. நான் செய்யப்போவது யாகமுமில்லை, ஹோமமுமில்லை—. எந்த நல்ல காரியத்திலும் டம்பனுகிய என்னுடைய ஸம்பந்தம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே விவேகனுக்கு அபிசாரம் ஏற்பட்டுவிடுகிற தென்பதை அறிவாய்: இதுதான் ஸூக்ஷ்மமன ரஹஸ்யம்.

வஞ்ச.—தெரிந்துகொண்டேன். இந்த யாகத்தில் உங்களுக்கும் புரோஹிதர் யாராவது உண்டோ?

டம்பன்—அடி மூடாத்மா! எனக்குமா புரோஹிதர்? எனக்கு சொல்லிவைக்கக்கூடிய ஒருவனுமா இருக்கிறுன்? பண்டிதனென்று என்னப்படுபவர்கள் ஒவ்வொருவரும் என்னையடைந்து உபதேசம பெற்றுப் போகிறுர்களே! இருந்தபோதிலும், லோக வியவஹாரத்திற்கேற்ப, கர்வனுகிய தர்ப்பன் இந்த யாகத்திற்குப் பேருக்கு ப்ரம்மாவாக யிருப்பன். அவனை எதிர்பார்த்தே, ஒன்பது தடவை புண்யாஹவாசனம் செய்யப்பட்ட இந்த விஸ்தாச்ரமத்தில் யாகத்துக்கான ஸகலத்தையும் சேகரித்துக் கொண்டு, ஸப்த ரிஷிகளினுலும் விரிக்கப்பட்ட இந்தத் தர்ப்பாஸனத்தில் உட்கார்ந்திருக்கிறேன்:— அதோ! அந்த மஹாத்மாவும் வருகிறுர்காண்! நாம் ஆச்ரமத்துள் செல்வோம்—.

(ஆச்ரமத்துள் போகிறுர்கள்.)

———

[பெரிய பாதுகைகளை தரித்தவனாய், கழுத்தில்
மாலைகளும், கைகளை வீசிக்கொண்டும்,
பெருந்தடியில் கொடிபோல் பத்திரிகை
கட்டிக்கொண்டும் கர்வனாகிற
தர்ப்பன் பிரவேசம்.]

சர்வ.—உத்தமர்களை நிந்திக்கும் பொருட்டு மகாமோக ராஜனால் நியமிக்கப்பட்ட நான் சகல லோகங்களின் தாரதம்யங்களைப் பார்க்க உத்தேசித்து இப்பொழுது பாரதவர்ஷமடைந்திருக்கிறேன். சென்ற விடமெல்லாம் என்ன சிறப்பு எனக்கு! என்ன உபசாரம்! என்ன வரவேற்பு! என்ன பகுமானம்! மற்றோர் கொடுத்த பஹுமானங்களைவிட, ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு லக்ஷ்மியைக் கொடுத்தோனும் க்ஷீரஸாகரனளித்த இந்த ரத்னஹாரத்தின் காந்தியே என் மதிப்பை பெருக்குகின்றது! என்னைப் பார்ப்பவர் பலரும் பதின்மூன்றாவது ஸூர்யனோ, பன்னிரண்டாவது ருத்ரனோ, ஒன்பதாவது வஸுவோ வென ஐயமுறுகிறார்கள்!

(சிறிது யோசித்து, கோபச் சிரிப்புடன்):—

என்னே உலகின் மடத்தனம்! நமது பரிசாரகர்களின் பரம்பரையில் சேர்க்கத்தக்க யோக்யதை யற்றவர்களுமல்லவா நமக்கு ஸமமானதும் மேற்பட்டதுமான ஸ்தானத்தை வஹிக்க விருப்பங்கொள்கிறார்கள்! ஸகல சாஸ்திர பண்டிதர்களையும் வென்று ஆளாக்கிக் கொண்ட எனக்குமா இணை உண்டு?... ஹ! ஹ! ஹ! சிக்ஷை யாரிடத்திலா? பாலினின்றும் நீரைப் பிரித்துப் பாலையே உண்ணு ஹம்ஸத்திற்கும், ஸாகரமனைத்தையும் ஒரே ஆசமனத்தில் வற்றடிக்க அகஸ்தியருக்கும் யாரி

டம் சிட்டைகூ?. என் கல்விச்சிறப்பு அப்படியிருக்க, என் குலச்சிறப்புதானென்ன? எமக்கு யாகஞ் செய்விக்க யோக்யதையுள்ளவர் இல்லாத காரணத்தாலேயே மூல புருஷர்முதல் எம் குலத்தோர் எவ்வித யஞ்ஞங் களும் செய்யவேண்டிய ஆவச்யக மின்றி யிருக்கிறோ மாக்கும்! ..ஹ! ஹ! ஹ! (வலது பக்கம் பார்த்து) வஞ் சனையாலும் கண்டறிய முடியாத யுக்திகளால் உலகத்தை வென்று வரும் என் சிஷ்யர்களின் சாமர்த்தியம் எவருக் கு வரும்? பௌத்தமதத்தில் 48 பிரிவுகளுண்டாக்கி அந்த வைதீகர்களுடைய வித்யாகர்வத்தை அபஹரித்து விட்டேன்! மதவாதிகளைப் பெருக்கி அவர்களுக்குள் ஆக்ரஹத்தை அதிகரிக்கச் செய்து, அவர்களிடும் சண் டைகளைக்கண்டு, மல்லர்கள் செய்யும் யுத்தத்தையும், ஆடுகள் இடும் சண்டையையும் கண்டானந்திப்பது போல், வாதயுத்த ரசத்தை சதா அனுபவித்துக் கொண் டே யிருக்கிறேன்!. . (மற்றோர் பக்கம் திரும்பிப் பார்த் து)—. அதோ! அதோ! கைநிறையப் பவித்ரமும் கட் க்ஷத்தில் புஸ்தகக் கட்டுமாக தாடிமீசை வளர்த்துக் கொண்டு தம்மைப்பண்டிதனெனக் கூறிக்கொண்டு சகல ரையும் ஏமாற்றிப் போதனை செய்து வருகிற நிரக்ஷர குக்ஷிகள் கூட்டமல்லவா அதோ அந்த மிலேச்ச தேசத் தில் தென்படுவது? (வடக்கு திக்கைப்பார்த்து)—.ஐயா வடதேசத்தவரே! தர்மதி தேவியின் ஆஞ்ஞையால் ஹிமவத் பர்வதச் சாரல் சென்ற என் பத்னிகள் அஸூ யை, ஈர்ஷ்யை என்பார்களைக் கண்டீரோ?—. (உற் றுக் கேட்டு,—என்ன?.... ஸுமதியின் தோழிகளான மைத்ரீ, முதிதை, கருணை, உபேக்ஷாதிகளால் நிவ்ருத்தி மார்க்கமென்னும் சுரங்கத்தில் அடைபட்டு விட்டார்களா?....(கோபத்துடன்) போய்! போய்!

ஏ விதவாஸூதனே! பிராம்மணப் பைசாசமே! என்பத்னிகளுக்கா ஆக்கதி வரக்கூடும்?...(உற்று நோக்கி). அடடா! பழைய ஆசாமிதான் இவன்! வைதீகனுகிய மித்யாசாரனல்லவா! இவனுடன் பேசியதும் தப்பு!....

ஶ்வஶ்ரூரஸ்ய திகம்பரவ்ரதவதீ ஸம்பந்திநஸ்ஸௌகதா:
மாதா சாஸ்ய பிதா ச பாஶுபதிநௌ வைஶேஷிகோ
தேஶிக: ।
ஜாயா திஷ்டதி ஸாங்க்யயோகஸமயே சார்வாகஶிஷ்யஸ்ஸாகா
மித்யாசாரஸமாஹ்வய: ஸ்வயமஸௌ விப்லாவகோ வைதிக: ॥

**ஶ்வஶ்ரூரஸ்ய திகம்பரவ்ரதவதீ ஸம்பந்திநஸ்ஸௌகதா:**
**மாதா சாஸ்ய பிதா ச பாஶுபதிநௌ வைஶேஷிகோ தேசிக: |**
**ஜாயா திஷ்டதி ஸாங்க்யயோக ஸமயே சார்வாக சிஷ்யஸ்ஸாகா**
**மித்யாசாரஸமாஹ்வய: ஸ்வயமஸௌ விப்லாவகோ வைதிக: ॥**

## காம்போதி—ஆதி.

| | | |
|---|---|---|
| ஸா ஸா ; ஸா ; ஸா - நீபா | பா தா - ஸா தாஸ்ா | ஸா - ஸ்ா பா ॥ |
| ச்வச்ரூ ; ர ; ஸ்ய - திகம் | ப . - ர . | வ்ர த - வ தீ ॥ |
| பா ; . தாபா - தா ஸ்ா - நீதா | பா மா - கா மா | பா ; - பா ; ॥ |
| ஸம்;- பந் . - தி . - ன: | ஸௌ. - . க | தா: ; - ; ; ॥ |
| பா தா - ஸ்ா ; ஸ்ா தா-தா பா | பா தா - பா மா | கா ரீ - ஸா நீ ॥ |
| மா . - தா ; சாஸ் . - ய பி | தா . - ச பா | சு ப - திநௌ ॥ |
| பாதா - ஸாதா - ஸாரீ-காஸா | ரீ பா - மா கா | கா ரீ - ஸா ; ॥ |
| வை. - சே . - ஷி. -கோ. | தே . - சி, க | : . - . ; ॥ |
| மா ; - கா ;-தா பா ; -தாதா | ஸ்ா ; ஸ்க் ரீ | க்ா ; - ம்ா க்ா ॥ |
| ஜா ; -யா ;-தி ஷ் ; - டதி | ஸாங்க்;ய . . | யோ ; - க . ॥ |
| க்ா ரீ-ம்ாக்ா-ரீ-ஸ்ா-ஸ்ாஸ்ா | தாஸ்ா - நீதா | பா ; பநிதா ॥ |
| ஸம.- யே .-சார் .- வாக | சிஷ் - ய : | ஸ ; கா . . ॥ |

பா ;- தா ; - ஸா ; -ஸ்ா ; ஸ்ா தா - ஸ்ா தா தா பா - பா ; ||
மித்; -யா ; - சா ; - ர ; ஸ . - மா . ஹ்வய - : ; ||

பாதா-ஸ்ாஸ்ா-தாபா-பாபா மா கா - ரீ கா ரீ ஸா - ஸா; ||
ஸ்வய-மஸெள-விப்.லாவ கோவை-திக : - - .; ||

(வேறு திக்குநோக்கி) அதோ! வெளிவேஷத்தால் மட்டும் காப்பாற்றப்பட்ட வர்ணாச்ரம தர்மங்களை யுடைய பிராம்மணர்களின் அக்ரகாரம்! உபநயநாதி ஸம்ஸ்காரங்கள் கேவலம் உத்ஸவார்த்தமாக நடத்தப்படுகின்றன! ஸந்தியாவந்தனம் ஓர் விளையாட்டாகவும் பொழுது போக்காகவும் செய்யப்படுகிறது! காயத்ரீ ஜபம் கோஷ்டியாகப் பலர்கூடி ஊர்வம்பளக்கவேண்டிய பிரகிருதமாகக் கொண்டாடப்படுகிறது! ஸூரதகேளி அக்னிஹோத்ரம் ஸாங்கோபாங்கமாக ஸதா நடைபெறுகிறது! அவ்வளவும் மோஹராஜன் வெற்றிக்கு அறிகுறியையே ஸூசிப்பிக்கிறதல்லவா!—(வேறு பக்கம் பார்த்து) அதோ! மடங்களின் மூலைகளில், மௌன ஸமாதியில் இருப்பவர்கள் யார்?—. வலதுகை விரல்கள் நிறைய தர்ப்பம்! மூக்கை இறுக்கிப் பிடித்திருக்கிறார்கள்!—. ஹ! ஹ! ஹ! (கைதட்டிக் குதூகலித்து) பேசுந்திறனில்லாமையாலும், ஆதரிப்பாரில்லாமையாலும் மௌனவிருதம் கொண்டு குதிரைப் ப்ரம்மசர்யம் பூண்டு உஞ்சவிருத்தி செய்யும் வேஷக்காரர்களல்லவா!—. (வேறு பக்கம் திரும்பி) பேஷ்! பிடிக்கடங்காத பூணூல் வடம்! மூடிய கண்! அசக்கிய வாய்! கையில் ஜபமாலை! வஸ்திரத்தின்மேல் கிருஷ்ணாஜினம்! அதன்மேல் தர்ப்பாஸனம்!—பேஷ் இவர்கள் வேஷம்! மார்ஜாரவ்ருத்தி! கொக்கின் வாட்டம்! நல்ல தபஸ்விகள்! காலடியில் விழும் காசுகள் தவிர்த்து வேறொதின்

பேரிலும் கண்ணோட்டமிருப்பதாகக் காணோமே இந்த யோகிகளுக்கு!—. ஸ்வர்ண மலையை இச்சித்து அக்னியில் ஹோமம் செய்கிறான் ஒருவன்!....கலியுக ஸந்யாஸிகளின் வைராக்யம் மெச்சத்தக்கதே! மடம் கட்டுவதாயும், க்ரந்தங்கள் பிரசுரிப்பதாயும், பிக்ஷையென்றும், சிஷ்ய ரக்ஷணமென்றும் பணம் பறித்துப் பிழைக்கிறார்களே இந்தக் காஷாயதாரிகள்!....ஸபாஷ்! உலகம் இப்படியிருக்கையில் மஹாமோஹராஜ்யம் நிலைநாட்டப் படுவதற்குமா ஸந்தேகம்? விவேகனுக்கு இடமேது இனி இவ்வுலகில்?—அதோ காணப்படும் ஆச்ரமம் யாருடையது?... தர்ப்பக்கட்டு—துளஸி! புஷ்பங்கள் குவியல் குவியலாக!....ஸூர்யனுக்கு ஸோதரனோ, ஜேஷ்டப்ராதாவோ, பிதாவோ என்று ஐயுறும்படியான ஜ்வலிப்பு!....உண்மையானதோர் முக்தன்தானோ?—(நெருங்கி) என் வலது கண் துடிக்கிறது! என்ன ஆச்சர்யம்! இந்த சகுனத்திற்குப் பத்னியின் சேர்க்கையல்லவா ஸம்பவிக்க வேண்டும்!—யோகியாச்ரமத்தில் இந்த விபரீதச் சகுனமேன்?—அதோ! ஓர்யோகியார் வெளி வருகிறார்—. மறைந்திருந்து கவனிப்போம்!

## ஸந்யாஸ வேஷத்துடன் அஸூயை பிரவேசம்.

அஸூயை.—தர்மதிதேவியின் உத்திரவினால் இத்தகைய கோலத்துடன் இவ்வீரேழுலகிலுமுள்ள விவேகிகள் ஒவ்வொருவரிடமும் தோஷாரோபணம் செய்து அவற்றையே பெரிதாக்கிப் பிரசுரித்து வந்தேன்! தோஷமற்ற பெரியோருமுளரோ?....ஹ! ஹ! ஹ; ஸ்ரீராமனையே எடுத்துக் கொள்வோம்!

𑌨𑌿𑌰𑌵𑌧𑌿 𑌗𑍁𑌣𑌗𑍍𑌰𑌾𑌮𑍇 𑌰𑌾𑌮𑍇 𑌨𑌿𑌰𑌾𑌕𑌵𑌿 𑌵𑌾𑌕𑌵𑌿
𑌸𑍍𑌫𑍁𑌰𑌣𑌮𑍁𑌷𑌿𑌤𑌾𑌲𑍋𑌕𑌾 𑌲𑍋𑌕𑌾𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌦𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 ।
𑌵𑌾𑌤𑌨𑍁𑌹𑌤𑌿𑌂 𑌵𑌾𑌲𑌿𑌦𑍍𑌰𑍋𑌹𑌂 𑌮𑌨𑌾𑌕𑌪 𑌸𑌰𑍍𑌪𑌣𑌂
𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌗𑍁𑌣𑍇 𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌾𑌵𑌦𑍍𑌯𑍇 𑌮𑍁𑌦𑌾 𑌕𑌿𑌮𑍁𑌦𑌾𑌸𑌤𑍇 ॥

நிரவதி குணக்ராமே ராமே நிராகவி வாகவி
ஸ்புரணமுஷிதாலோகா லோகா வதந்தி ஸதந்திகே ।
வாதநுஹதிம் வாலித்ரோஹம் மநாகப ஸர்பணம்
பரிமிதகுணே ஸ்பஷ்டாவத்யே முதா கிமுதாஸதே ॥

## கேதாரகௌளம்—ரூபகம்.

| | |
|---|---|
| ;=பா நீ ஸ்ா ஸ்ா ; | நீ தா—பா ;—பா ; |
| ;=நி ர வ .தி ; | குண—க்ரா;—மே; |
| மா பா—தா பா—மா கா | ரி ம ரீ—மா பா—;; ॥ |
| ராமே—.நி ரா—க வி | வா . .— க வி—;; ॥ |
| ;=ப ப ஸ்ா—நீ தா பா | மா கா—கா ரீ—ஸா ஸா |
| ;=ஸ்புரண—முஷிதா | லோ .—கா .—லோகா |
| ரீ மா—பா ;—; மந | ப ஸ் நீ—தா பா—;; ॥ |
| வதந் — தி;—; ஸ | தந் . . —திகே—;; ॥ |
| ; ஸ் நி—ஸ்ாரீ·—ரீ· ரீ· | ரீம்ா—க்ா ரீ·—க ரிஸா |
| ; வ ர— தனு—ஹதிம் | வா .—லி . —த்ரோ.ஹம் |
| நீ ஸ்ா ; ரீ· ஸ்ா'; | ஸ நி ரி· ஸ்—நீதா—தநிபா |
| மஞ ; க' ப'; | ஸர்ப் . . . —. ப—ணம். . |
| ;=மா பா ரீ ஸ்ா ; | நீ தா—தநி பா—பா ; |
| ;=ப ரி மி த ; | குணே—ஸ்ப.—ஷ்டா; |
| மா பா—; நித—தாபா | மாகா—ரிமகரி—ஸாஸா |
| வத்யே—;மு.—தா . | கி மு—தா . . .—ஸதே ॥ |

ப்ரபஞ்சத்திலுள்ள தோஷங்களைப் போக்கடிக்கவல்ல அந்தப் பகவானிடமும் தோஷத்தைக் கூறவல்லேனல்லவா நான்!—. (கர்வனைக் கண்டு)....அதோ! சுவர்ண

குண்டலங்கள்! தண்ட கமண்டலு! இடையில் தர்ப் பக்கயிறு,! வயிறோ ! அஷ்டகா ச்ராத்த போஜனத்தால் பருத்த ஏற்றச் சால்!

(கர்வன் முன்வர)

அடிக்கடி ஹூங்காரக் கனைப்பு!—. இந்த ஆச்ரமத்துள் நுழையப் பார்க்கிறான் போலும்!—தடுத்து நின்று யா ரென அறிகிறேன்.—

கர்வன்.—(வணக்கத்துடன்) பகவதி! மகாயோக ஸித்தி பெற்றவளாய்த் தோன்றும் உனது ஊர், குலம், கோத் ரம் முதலியனவற்றை நான் அறிய விரும்புகிறேன்—.

அஸூ.—பிள்ளாய்! என்போன்ற இவ்வாச்ரமத்தில் உள் ளவர்கள் சொல்லக்கூடாத விஷயங்களை என்னைச் சொல் லச்சொல்லுகிறாய்? என்னை ஏன் நமஸ்கரியாது யூபஸ் தம்பம்போல் நிற்கிறாய்?

கர்வன்.—நீ ஆச்ரமமொன்றில் மட்டும் பெரியவள். நானோ வயது, கர்மம், வித்யை எல்லாவற்றிலும் உன்னை விடப்பெரியவனாயிருக்க, நான் எப்படி உன்னை நமஸ் கரிக்கக் கூடும் என்றுதான் தயங்குகிறேன்.

அஸூ.—இந்த ஸந்தேகத்தை இந்த ஆச்ரமத்திலுள்ள பெரி யாரைக் கேட்டுத் தெளிவோம் முதலில்.

கர்வன்.—ஸரி—. ஆயினும்—. நீ இதற்குமுன் என்னால் அனுபவிக்கப்பட்டவளாகவே காண்கிறாயே!—. வே ஷம் மட்டும் வேறாயிருக்கிறது!

அஸூ.—நீயும் பழைய பரிச்சய முள்ளவனாகத்தான் தோ ன்றுகிறாய்! இருந்தபோதிலும் உன் ஸந்தேகத்தை

ஆச்ரமத்திலுள்ள பெரியாரிடம் கேட்டு நிவர்த்தித்து, பிராயச்சித்தாதிகளை முடித்து உன்னைப் பரிசுத்தனுக்க வேண்டும் முதலில்!

கர்வன்.—(தனக்குள்). கொண்டிருக்கும் வேஷத்தால் தைரியமாய்ப் பிதற்றுகிருள்! (வெளிப்படையாய்). இந்த ஆச்ரமத்திலுள்ள பெரியார் யார்?

அஸூ.—பார்த்தால் தெரியவரும் அவர் பெருமை.

(ஆச்ரமத்துள் செல்கின்றனர்.)

---

## மூன்றும் காட்சி.

இடம் :—டம்பன் ஆச்ரமத்திற்குள்.

---

[டம்பனும், வஞ்சனையும் :-கர்வனும், அஸூயையையும் வருவதைக்கண்டு டம்பன் மௌன விரதம் அபிநயித்து பத்னியை ஜாடையால் ஏவுகிருன்.]

வஞ்சனை.—ஐயா (பரபரப்புடன்)—. ஐயா பிராம்மணோத்தமரே! அம்மா பகவதி! வெகுதூரம் நடந்துவந்து அசுத்தமாயிருக்கும் உங்கள் நிழல்கூட மஹாயோகியாகிய இவர்மேல் படக்கூடாது. எட்டி நில்லுங்கள்.—கங்கா ஜலத்தையே மஹரிஷிகளே கொண்டுவந்தாலும் அதில் கையையும் நனைக்கமாட்டார் என் யஜமான்! கிட்டி வராதேயுங்கள்!

கர்வன்.—அபூர்வதம்பதிகள் நீங்கள்! கங்கா யமுனா ஸங்கமத்தில் தீர்த்தமாடிய மஹாபரிசுத்தர்கள் நாங்கள்!

எங்கள் தேஜஸ்ஸென்ன! கியாதியென்ன! சூர்யனைப் போல் ஸ்வயம் பிரகாசிகளான எங்கள் நிழலும் கீழே விழுமா? ஸந்தேக நிவ்ருத்யர்த்தம் இங்கே வந்தால், அதிதி ஸத்காரம் ஏதும் செய்யாததுடன், அநாதரவுமா செய்கிறீர்கள்? ஹ! ஹ! ஹ! தனது மூடத்தனத்தை மறைத்துக் கொள்ள உனது யஜமானர் மௌன விரதம் கொண்டிருக்கிறாரோ?

டம்பன்.—(புருவத்தை நெறித்து ஹூங்காரஞ் செய்கிறான்.)

வஞ்சனை.—(வேகத்துடன் அருகில் சென்று வாயைப் பொத்திய கையுடன்) மௌன விரதத்தை சாஸ்திரோக்தமாக முடித்துக்கொண்டு, அதிதிகளுக்குப் பதில் சொல்லலாம்—.

டம்பன்.—(உரத்து ஓமென்று ப்ராணாயாமம் அபிநயத்து)—அடே வ்ராத்யப் பிராமணா! மூடசிகாமணியே! தபோபலம் குறையப்போகிறதே யென்று உன்னைச் சபிக்காமல் விட்டேன்! என் சாபத்தினால் சாம்பலானோரைக் கணக்கிட முடியாது! போ இக்கணமே என் எதிர் நில்லாதே! என் நேத்ரஜ்வாலை உன்னை பஸ்மப் படுத்துமுன் தப்பி மறை!

கர்வன்.—(கோபத்துடன்) மூடா! ஜாத்யபிமானத்தினால், என் பாதங்களால் உன் கபோலம் அலங்கரிக்கப்படாது தப்பியது அறிவாய்! நான் யார் தெரியுமா?

[illegible]

𑌖𑍍𑌯𑌾𑌤𑌶𑍍𑌶𑌿𑌷𑍍𑌯𑌭𑍂𑌮𑍍𑌨𑌾𑌦𑌿𑌶𑌿𑌦𑌿𑌶𑌿𑌭𑌵𑌤𑌾
𑌕𑍂𑌪𑌕𑍂𑌰𑍍𑌮𑍋𑌪𑌮𑍇𑌨
𑌸𑍍𑌥𑌾𑌤𑌾𑌵𑌾𑌤𑌾𑌹𑌵𑍇𑌷𑍁𑌸𑍍𑌥𑌵𑌿𑌰 ! 𑌕𑌤𑌮𑌹𑌂
𑌨𑌶𑍍𑌰𑍁𑌤𑍋𑌨𑌾𑌭𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌃 ॥

துண்டீரம் மண்டலம் மே குலபதிரபி ச ஸ்கந்தபூபாலவந்த்ய:
க்ஷேத்ரம் ஸத்யவ்ரதாக்யம் க்ஷிதிதல திலகம் க்ஷாத்ரகாஞ்ச்யக்ரஹாரா:-
ப்ரக்யாதச் சிஷ்யபூம்னாதிசிதிசி பவதா கூபகூர்மோபமேந
ஸ்தாதாவாதாஹவேஷுஸ்தவிர ! கதமஹம் ந ஶ்ருதோநாபித்ருஷ்ட:.

## பிலஹரி—ஆதி.

| | | |
|---|---|---|
| ஸ்ா ஸ்ா ; நீ—தாபா—பாபா | பா பா—தா பா | மாகா—காரீ ‖ |
| துண்டீ ; ரம்—மண்ட-லம்மே | குல — ப தி | ர பி —ச . ‖ |
| கா·;—கா் ;—பா ; பா் தா | ஸ்ா நீ—நீ தா | ஸ்ா ;—;; ‖ |
| ஸ்க ; ந்த ;—பூ ; பா ல' | வந்த் —ய . | : ;—;; ‖ |
| நீ தா—ரீ·ரீ·—ஸ்ா நீ—தாபா | கா பா தா பா | மாகா கா ரீ ‖ |
| க்ஷே.-த்ரம்.-ஸத்-யவ்ரா-தாக்யம் | க்ஷி தி த ல | தில கம் ‖ |
| கா ரீ கா—பா ;;—மா கா | ரீ ஸா நீ.தா | ஸா ;—;; ‖ |
| க்ஷா.த்ர—காஞ்:;—ச்ய . | க்ரஹார . | : ;—;; ‖ |
| ரீ கா—பா கா—பா ;—பாபா | பாதா—ஸ்நிதா | ஸ்ா ; ஸ்ா ; ‖ |
| ப்ரக்.—யா த— : ;—சிஷ்ய | பூம் .—நா . | தி ; சி ; ‖ |
| ஸ்ாரீ·—க்ாப்ா—ம்க்ரீ·—ஸ்ாஸ்ா | தாஸ்ா - நீதா | ஸ்ா ; ஸ்ா ; ‖ |
| தி சி—ப வ —தா . . - கூ ப | கூ ர் - மோப | மே ; ன ; ‖ |
| தந ; - ரீ ; - ஸ்ா ; நீ ; | தப பா - ; பா | மா கா கா ரீ ‖ |
| ஸ்தா ; தா;-வா; தா ; | ஹ.வே ; ஷு | ஸ்த வி ர . ‖ |
| ரீ கா - தா பா -மாகா - ரீஸா | ரீ ஸா நீ தா | ஸா ; - ;; ‖ |
| க த -ம ஹம் - ன .-ச்ருதோ | நாபித்ருஷ்ட | . ;— ;; ‖ |

(சிரித்து)—அடே டாம்பிகா! என் ப்ரபாவம் என்னைத் தவிர வேறு எவரால் அறியவல்லது? என் யோக்யதைக ளில் லவலேசமாவது மஹாயோகிகளுக்கும் இருக்குமா? எனவேயன்றோ மூத்தோரையும் என் ஸேவைக்கு அர் ஹரல்ல என்று கருதி நான் ஸேவிப்பதுமில்லை!—. என் தர்மானுஷ்டான ச்ரத்தையை நீ அறிவாயோ? ஹ! ஹ! ஹ! ஊராரால் ஸம்சயிக்கப்பட்ட பந்து ஒருத்தி, தானுக வந்து என் தாயாரிடம் பேச யத்தனித்த நிமித்தத்தி னுல், மஹா பதிவ்ரதா சிரோமணியான என் தாய் அனு சாரப்பட்டு விட்டதாக அவளையே துறந்தவனடா நான்!

டம்பன்.—ஹ! ஹ! நல்ல ப்ரம்ம பந்துதான் நீ—. அடே விநய மற்ற துராசார! இந்த ஸந்யாஸினியை நீ நமஸ்க ரிக்க வில்லை! போகட்டும்—. மஹாகியாதிவாய்ந்த பெ ரியவனுன என்னையும், யாவரும் அஞ்சி வணங்கும் என் பத்னியையும் நீ நமஸ்கரியாத காரணம் யாது?

கர்வன்.—அடே ஆத்ம ஸ்தோத்திரஞ் செய்து கொள்ளும் பாவி! மஹா பூஜ்யனுன என்னைப் பூஜியாத தோஷத் தால் நீ நாய் ஜென்மமோ சண்டாள ஜென்மமோ அடை யப் போகிறுய்!

வஞ்சனை.—அம்மா ஸந்யாஸினி! இந்த நீசப் பிராமணன் இந்த மஹரிஷியை நிந்திப்பதால் நாசமடையப் போகி ருன் பார்!

அஸூ.—அதிதிகளை ஆராதிக்கும் யோக்யதையற்ற தார்மிக பத்னியின் நிந்தனை வெகு நன்று யிருக்கிறது!.

டம்ப.—(கோபத்துடன்) அடே! காக்கையைப்போல வீணில் கத்துகிறவனே! நீதான் நாய் மாதிரி ஊருராய்த்திரிந்து வருபவன்! மூடு வாயை!

கர்வ.—(கைகொட்டிச் சிரித்து) ஹ! ஹ! உள்ளதைச் சொன்ஞல் கோபம்தான் வரும்! ஏனடா குரங்கைப்போல் அப்படிக் கோபித்துக் கொக்கரிக்கிருய்?

டம்ப.—தூணைப்போல் பருத்திருக்கிருயே யொழிய லோக வ்யவஹாரம் ஒன்று மறியாதவனுகக் காண்கிருய் நீ! ப்ரம்மாவே தன் ஹஸ்தங்களினுல் எனக்கு அர்க்ய மளித்திருக்கிருர்! இவர் பரம்பரையில் பிறந்த பலரும் இன்றும் கிருதார்த்தர்களாக வேண்டி எனது ஸ்ரீபாத தீர்த்தத்தினுல் ப்ரோக்ஷிக்கப் படுகின்றனர் காண்!

வஞ்சனை.—ஸ்வாமிகள் ஸாதித்தருளிய தவ்வளவும் யதார்த்தமே! ஸஹதர்மிணியாகிய நான் ப்ரத்யக்ஷமாகக் கண்டதுவே!

கர்வன்.—பேஷ்! அம்மா ஸந்யாஸினி! யுக்தி விசேஷத்தால் நான் இப்பொழுது அறிந்ததைக் கூறுகிறேன் கேள்! பிறர் சொத்திலேயே கண்ணுள்ளவளும், கோணபுத்தி மிகுந்தவளுமான இவளே என் மதினி குஹனுதேவி! ஸ்வாமிகள்தான் என் முத்தண்ண டம்பாசாரியார்! நமது தர்ம ஸந்தேகம் இவர்களால் எப்படித் தீரவல்லது?

டம்பன்.—(மந்தாஹாஸத்துடன்)—. ஸரிதான்! ஸரிதான்! வீண்சப்த ஆடம்பரஞ் செய்பவனும், மிகுந்த குணசாலிகளையும் தூஷிப்பவனுகிய நீ, தம்பி கர்வனுகத்தான் இருக்கவேண்டும்! ஸந்யாஸினிவேஷம் பூண்டிருப்பது உனது தர்மபத்னி அஸூயையம்மாள் தான்! தர்ம ஸந்தேகம் நிவர்த்தியாயிற்ரு? என்ஞல்!

கர்வன்.—அண்ணு! அடியேன் அபராதங்களை க்ஷமித்தருள வேண்டும்!

டம்பன்.—அபராதமென்ன! அதுவே யன்ருே நம் குணம் (ஒருவரை யொருவர் கட்டிக் கொள்கிருர்கள்.)

கர்வன்.—அதோ! மகாராஜனும் தேவியாரும் வருகிருர்கள்! நாம் சற்று அடங்கி ஒதுங்கி நிற்போம்.

(ஒதுங்கி நிற்கிருர்கள்)

[மகாமோகனும் துர்மதியும் பிரவேசம்.]

மோகன்.—என்ன ஆச்சர்யம்! விவேகனை வெல்வதற்காக அனுப்பப்பட்ட காமக்ரோதாதியர், வ்யூஹம் கலைந்து, பயந்தோடி, 'நம்மைக் காண்பதற்கு அஞ்சிப் ப்ராயோபவேசஞ் செய்து விட்டார்களாமே! குயுக்திகளாலான பல்வேறு மதங்களும் பிரயோசன மற்றன! பெண்ணுசையும், மண்ணுசையும், பொன்னுசையும், பேராசை கோபம் முதலியனவற்றின் உதவியைப் பெற்றபோதிலும், விவேகனுல் பீடிக்கப்பட்ட ஜீவாத்மாவால் நிராகரிக்கப்பட்டன! இருந்தும், ஜீவன் பூர்ணமாக விவேகன் வசம் ஆகாமல் ஊசலாடிக்கொண்டிருக்கும் தற்கால நிலையில், ஊக்கம்விடாது நமது ராஜ்யத்தை நிலைநிறுத்த முயன்றே தீரவேண்டும்! அதற்கேற்ற ஸாமர்த்யமுள்ள மந்திரிகளைத் தேடவேண்டும்!

(டம்பன் முதலானேர் முன்வந்து நமஸ்கரிக்கின்றனர்.)

ப்ரியே! நீகவலைவிடு ராக்ஷஸர்களை வெல்வதில் ராமன் தனித்தே நின்று ஜெயித்தாப்போல, காமக்ரோதாதியரால் கைவிடப் பட்டாலும் நான் தனித்தேனும் நின்று, விவேக மோஹ யுத்தத்தில் வெற்றி பெருது திரும்பேன் என்பதை நிச்சயமாய் நம்பு!

டம்பன்.—பிரபோ! அந்த ராமனுக்குக் குரங்குகளல்லவா உதவி செய்து வெற்றியைக் கொடுத்தன. கிருஷ்ண னுக்குக் கேவலம் இடையர்களே யன்றோ பக்க பலம். ஆகவே, இதோ நிற்கும் நாங்கள் இருக்க உமக்கேன் கவலை?

மோகன்.—பேஷ்!—. இந்தக் கலிகாலமே எனக்குத் தேர்! துர்மதீ! நீயே என் ஸாரதி! டம்பனே எனது ஜயத் தைத் தெரிவிக்கும் துந்துபியாகிறான்—. கர்வனே இனி எனது கவசம்! வெற்றி என்னுடையதே!—. டம்பா மீண்டும் புண்ய நதிகளின் சமீபங்களில் சஞ்சரித்து உனது தர்மங்களை ஜாக்ரதையாகக் காத்து வருவா யாக!—. தர்ப்பா! மகா வைராக்யத்துடன், தபஸ் செய்பவர்கள் நிறைந்த காடுகளிலும் வேறிடங்களிலும் சஞ்சாரஞ்செய்து என் ஆஞ்ஞாசக்ரத்தைக் கைவிடாது செலுத்தி வருவாய்.

டம்ப. - தர்ப்ப.—மகாராஜன் உத்திரவுப்படியே இதோ செல் கிறோம்!

(தத்தம் மனைவிகளுடன் செல்கிறார்கள்.)

மோகன்.—ப்ரியே! இனிநாம் தைரியத்துடன் செல்வோம் வா! விவேகனை வெல்வது அசாத்யமான தல்ல. ஜயம் நம்மை விட்டு விலகவில்லை. இன்னமும்!

(குதூஹலத்துடன் செல்கிறார்கள்.)



## நான்காம் காட்சி.

### இடம் :—விவேகனது கோட்டைக்.கெதிரில்.

---

[விவேகன், தன் ஸாரதியான தர்க்கனுடன் ரதாரூடனுய்க் காணப்படுகிருன்.]

**விவேகன்.**—தர்க்கா! த்யானத்திற்கேற்ற ஸ்தலத்தைத்தேடி வரும் என் மனோரதத்தை வெகு சாமர்த்யத்துடன் செலுத்தக்கூடியவன் நீ ஒருவனே! ஜீவாத்மா சகலேந்திரியங்களையும் தனக்கு வசமாக்கிக் கொண்டுவிட்டான்! கர்மபூமியாகிற பாரத வர்ஷத்தில்தான் யோகம் ஸித்திக்கும்—. அதுள், கைலாஸம் பவானீபதிக்கு ஸ்தானமாயினும், அநங்யப் பிரயோஜனமான த்யானத்திற்கு அது ஏற்ற இடமல்ல—. ஸித்தர்களினுல் அடையப்பட்டிருக்கும் கந்தமாதன பர்வதமும் யோகஸித்தி உண்டாகக்கூடிய இடமில்லை. ஆயினும்! யுத்தத்தில் உண்டான காய வடுக்களுடன் ஸ்ரீராமனை ஸ்தோத்திரஞ் செய்து குதூகலத்துடன் காணப்பட்ட ஆஞ்சநேயன் ஆங்குபாடிய ச்லோகமொன்று இன்னமும் என்காதில் ஒலித்துக்கொண்டே மனதில் பதிந்திருக்கிறது! ஹா! ஹா!

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

பகவதி பாரத்வாஜே புக்திஸ்ததா ஶபரீ க்ருஹே
ப்ராபுராணுஸ்ருதோ விஶ்வாமித்ர: ப்லவங்கபதிஸ்ததா |
ப்ருகுபதி தபோஹானம் த்ருஷ்டி: ககஸ்ய ச தக்ஷிணா
ஜயதி லளிதோத்துங்காவ்ருத்திர்தஶாஸ்ய ரிபோரியம் ||

## ஸாவேரி—ரூபகம்.

| | |
|---|---|
| ;=மா பா தா பா ; | பா மா - நி நி பா - தா ; |
| ;=ப க வ தி ; | ப ரத் - வா . . - ஜே ; |
| ; பா மா பா - தா ; | ஸா ஸா ஸா ; ஸாஸா \|\| |
| ; புக்திஸ்த - தா ; | ச ப ரீ ; க்ருஹே \|\| |
| ;=பா த ப தா ரீ ஸா | நீ தா - பா மா - த ப தா |
| ;=ப்ர பு . ர . ணு | ஸ்ரு.-தோ. - விச் . வா |
| ; தா த ம கா ரீ ரீ | ரீ ரீ பா மா -த ப தா \|\| |
| ; மித்ர : ப்ல.வங் | க ப் திஸ் .- த . தா \|\| |
| ;=பா மா - பா ; தா | ஸா ; -ஸா ; - ஸா ஸா |
| ;=ப்ருகு - ப ; தி | த : - போ; - ஹானம் |
| ; பா தா ஸா ஸா ஸா | ஸா, ரீ -ஸநிதா - பாதா \|\| |
| ; த்ருஷ்டி:க கஸ்ய | ச, . - த . . - க்ஷிணா \|\| |
| ;=தபதாஸ்ரி- க்ா ரீ | ஸா ஸ் ரி - ஸநிதா பா தா |
| ;=ஜயதில . - ளிதோத் | துங்கா . - வ்ருத்... தி : |
| ; பா மா ப த நி ப தா | ப த பம - காரீ - ரீஸா \|\| |
| ; த சா ஸ்ய . . . ரி | போ. . . - . . . - ரியம் \|\| |

இங்கிருந்தால், மனது, த்யானத்தைமறந்து இந்தக்கர்ண ம்ருதத்தால் மயக்கப்பட்டு நிலைதடுமாறக்கூடும்!—. ஹிமவத்பர்வதச்சாரலிலோ, கங்கையின் சலனமும் ஸமாதியை க்கெடுக்கவல்ல பல ச்ருங்காரங்களுங் காணப் படுகின்றன—. ஆர்யாவர்த்த தேசமும் பாஷண்டர்கள் நிறைந்துளதால் நம் காரியத்திற்கேற்றதல்ல—. ஹ! ஹ! அயோத்யையை நினைத்தால் மயிர்க் கூச்சலிடுகிறது!

𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈𑌕𑌸𑍍𑌮𑍈𑌚𑌨 𑌭𑌵𑌤𑍁 𑌨𑌿𑌷𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌨𑌜𑌨
𑌸𑍍𑌵𑌯𑌂𑌰𑌕𑍍𑌷𑌾𑌦𑍀𑌕𑍍𑌷𑌾 𑌸𑌮𑌧𑌿𑌕𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑌾𑌗𑌯𑌶𑌸𑍇 ।
𑌸𑍁𑌰𑌾𑌧𑍀𑌶𑌸𑍍𑌵𑍈𑌰𑌕𑍍𑌷𑌣𑌕𑍁𑌪𑌿𑌤𑌶𑌾𑌪𑌾𑌯𑍁𑌧𑌵𑌧𑍂
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌦𑍁𑌰𑍍𑌜𑌾𑌤𑌪𑍍𑌰𑌶𑌮𑌨𑌪𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌜𑌰𑌜𑌸𑍇 ॥

**நமஸ்தஸ்மைகஸ்மைசந பவது நிஷ்கிஞ்சநஜன**
**ஸ்வயம் ரக்ஷாதீக்ஷா ஸமதிக ஸமிந்தாக யஶஸே |**
**ஸுராதீஶஸ்வை ரக்ஷணகுபித ஶாபாயுதவது**
**த்ருஷ்த்தா துர்ஜாத ப்ரஶமந பதாம்போஜ ரஜஸே.**

ஆனால் தத்ஸமயமோ, இவ் வயோத்யையும் கிருதயுக தர்மம் நீங்கியும், நிவர்த்தி தர்மத்தைக் கொண்ட ஸாதுக்களால் விடப்பட்டதாயு மிருக்கிறது !—. பூமிபாரத்தைப் போக்கவேண்டிப் பகவான் அவதரித்து லீலா விநோதங்கள் நடத்திவந்த மதுரா பட்டினமோ, அந்தக் காரணத்தால் பூஜிக்கத் தக்கதே !...

𑌹𑌰𑍍𑌤𑍁𑌂 𑌕𑍁𑌮𑍍𑌭𑍇 𑌵𑌿𑌨𑌿𑌹𑌿𑌤𑌕𑌰𑌃 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁𑌹𑌯𑍍𑌯𑌙𑍍𑌗𑌵𑍀𑌨𑌂
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌦𑌾𑌮𑌗𑍍𑌰𑌹𑌣𑌚𑌟𑍁𑌲𑌾𑌂 𑌮𑌾𑌤𑌰𑌂 𑌜𑌾𑌤𑌰𑍋𑌷𑌾𑌂 ।
𑌭𑌾𑌯𑌾𑌦𑍀𑌷𑌤𑍍 𑌪𑍍𑌰𑌚𑌲𑌿𑌤𑌪𑌦𑍋 𑌨𑌾𑌪𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍
𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌗𑍋𑌪𑌸𑍍𑌸𑍍𑌵𑌪𑌿𑌤𑌿 𑌨𑌯𑌨𑍇 𑌮𑍀𑌲𑌯𑌨𑍍 𑌵𑌿𑌶𑍍𑌵𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 ॥

**ஹர்தும் கும்பே விநிஹிதகர: ஸ்வாதுஹய்யங்கவீநம்**
**த்ருஷ்ட்வா தாமக்ரஹணசடுலாம் மாதரம் ஜாதரோஷாம் |**
**பாயாதீஷத் ப்ரசலிதபதோ நாபகச்சந்நதிஷ்டந்**
**மித்யாகோபஸ் ஸபதி நயநே மீலயந்விஶ்வகோப்தா.**

ஆனாலும், சுந்தரிகளான கோபிமார்களது லீலைகளையே ஞாபகப்படுத்துவதும், தத்காலம் அதர்மத்தால் முழுங்க

ப்பட்டதுமான அந்த மதுராபுரியும் சமாதிக்கு ஏற்ற இடமில்லை—. ஸ்ரீஹரிக்ஷேத்ர மெனப்படும் ஸாளக்ராம க்ஷேத்ரமும் என்மனத்திற்குப் பிடித்ததாயில்லை! வாரணஸியும் வஸதியான தல்ல—. விந்த்யாசலச்சாரலும் பிரயோஜனமில்லை—. பாலைவனங்கள்,—பணமே பிரதானமாகக் கொண்டவர்கள் நிறைந்த இடம்—.

ப்ரளபதி பூர்ணதி ஸ்கலதி மூஹ்யதி ஹாங்குருதே
ந ச பதவீமவைதி ந ச தாம ந சத்ரபதே।
விக்ருதிமுத ப்ரஸூதி விஷமாஸ்ய தோஷபூமா
தமதிராமதே தமதீவ தாரவலயம்॥

ப்ரளபதி பூர்ணதி ஸ்கலதி மூஹ்யதி ஹாங்குருதே
ந ச பதவீமவைதி ந ச தாம ந சத்ரபதே |
விக்ருதிமுத ப்ரஸூதி விஷமாஸ்ய தோஷபூமா
தமதிராமதே தமதீவ தாரவலயம் ||

காவிரிப் பிரதேசமும் மகாகடினசித்தர்களும், அங்குள்ள ஸாதுக்களிடம் விஷமம் செய்பவர்களும், ஹிம்ஸிக்குமவர்களாலும் நிறைக்கப்பட்டிருக்கிறது—. யாதவாசலம் பரவாயில்லை—. பரசுராம க்ஷேதிரம் மோக்ஷ ஆசையுள்ள பெரியோர்களை நிந்திக்கும் இடம்—. மலயபர்வதம் பூலோக ஸ்வர்க்கந்தான்—. பாண்டிய தேசம் நம் ஸம்பிரதாய கூடஸ்தரான ஸ்ரீசடகோபன் திருவவதரித்த பிரதேசம்! (கைகூப்பி)

ஸார ஸாரஸ்வதா நாம் ஸம்ரிவாஹணீதி
ஸ்லாகிஸஞாதவீரா

𑌮𑌾𑌯𑌾 𑌮𑌾𑌯𑌾𑌮𑌿𑌨𑍀𑌭𑌿𑌃 𑌸𑍍𑌵𑌗𑍁𑌣𑌵𑌿𑌤𑌤𑌿𑌭𑌿
𑌰𑍍𑌬𑌨𑍍𑌧𑌯𑌨𑍍𑌤𑍀 𑌨𑍍𑌧𑌯𑌨𑍍𑌤𑍀 ।
𑌪𑌾𑌰𑌂𑌪𑌾𑌰𑌂 𑌪𑌰𑍀𑌤𑍋 𑌭𑌵𑌜𑌲𑌧𑌿
𑌭𑌵𑌨𑍍𑌮𑌜𑍍𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑍇𑌨𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌨𑌿𑌯𑌤
𑌰𑌮𑌾𑌸𑌙𑍍𑌗𑌿𑌤𑌾𑌨𑌂 𑌨𑌿𑌤𑌾𑌨𑌂 ॥

ஸாரஸ் ஸாரஸ்வதாநாம் ஸ்படிகமணிநிதி ஸ்ஸாரந்திஸூத்தாந்தஸீமா
மாயா மாயாமிநீபி: ஸ்வகுணவிததிபிர்பந்தயந்தீ ந்தயந்தீ ।
பாரம்பாரம் பரீதோ பவஜலதிபவந் மஜ்ஜநாநாம் ஜநாநாம்
ப்ரத்யக் ப்ரத்யக்ஷயென்ந: ப்ரதிநியதரமாஸங்கிதாநம் நிதாநம் ॥

திருமாலிருஞ்சோலைக் கண்ணிருக்கும் அழகர் க்ருபை எல்லா இடங்களிலும் பரவி இருக்கிறதல்லவா!

𑌤𑍍𑌵𑌯𑌾 𑌜𑍁𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌂 𑌭𑌜𑌤𑌿 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌠𑍀 𑌨𑌿𑌜𑌪𑌦𑍇
𑌵𑌹𑌨𑍍𑌮𑍂𑌰𑍍𑌤𑍀𑌰𑌷𑍍𑌟𑍌 𑌵𑌿𑌹𑌰𑌤𑌿 𑌮𑍃𑌡𑌾𑌨𑍀 𑌪𑌰𑌿𑌬𑍃𑌢𑌃 ।
𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌾𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌵𑍃𑌷𑌶𑌿𑌖𑌰𑌿 𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑌿 𑌕𑌰𑍁𑌣𑍇
𑌶𑍁𑌨𑌾𑌸𑍀𑌰𑍋 𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰 𑌸𑌮𑌰𑌨𑌾𑌸𑍀𑌰𑌸𑍁𑌭𑌟𑌃 ॥

த்வயா ஜுஷ்டதுஷ்டிம் பஜதி பரமேஷ்டீ நிஜபதே
வஹந்மூர்த்தீரஷ்டௌ விஹரதி ம்ருடாநீ பரிப்ருட: ।
பிபர்தி ஸ்வாராஜ்யம் வ்ருஷசிகரி ஸ்ருங்காரி கருணே
ஸூநாஸீரோ தேவாஸுர ஸமரநாஸீரஸுபட: ॥

அப்பப்ப! சோள தேசத்தில் தங்குவதும் பிசகு! கலை மகள் நூபுரம் ஒலியின் மிருதியை ஸூசிக்கும் கவிஞர்கள் வாக்கு மலிந்து சஞ்சல சித்தர்களைக் கவரும்

